## இன்றைய சூழ்நிலையில்.........

- ராஜபோகத்தினர் — பெரும் பதவியினர் — மொத்தத்தில் வசதி நிறைந்த வாழ்வினர் — *'ராஜிநாமா'* செய்வதில் வியப் பொன்றுமில்லை! ஆனால், கீழ்த்தரப்பட்ட — நடுத்தரப்பட்ட வர்களின் *'ராஜிநாமா'* சிந்திக்கத்தக்கது; சகிப்புத் தன்மைக்கு அப்பாற்பட்டது; பல்வேறு ஊழல்களை வெறுப்பது, எதிர்ப்பது; முடிவாகப் பல்லோர்க்குப் புத்துணர்ச்சியளிப்பது!



- அரசியல் அமைப்பு முறை இருக்கட்டும்! அதோடு, கோபால்சாமியின் வஞ்சம், கண்ணுசாமியின் கருங்காலித்தனம் அதிகாரியின் ஆணவம் இவையும் — சோமசுந்தரத்தின் *'ராஜிநாமா'*விற்குத் துணையாகின்றன. நல்லவர் அவர், தொல்லைப்படுகிறார்.



- நூலாசிரியரின் கற்பனை, கற்பனையல்ல; அப்பட்டம் உண்மை! அலுவலகத்து உரையாடல் எப்படியோ, அப்படியே எழுதி யுள்ளார் ஆங்கிலமும் கலந்து, வழக்கான பேச்சு நடையில்!



- இன்றைய சூழ்நிலைக்கேற்ப வெளியிடப்படும் இந்நூல், நிர்வாகம் செம்மைப்படுவதற்கு ஓரளவு உதவுவதாயின், அதுவே நாம் பெறும் கைம்மாறு!

— **வெளியிடுவோர்**

# ராஜிநாமா

(கற்பனைக் கூத்து)

★

நா. இராசவேல்




★

'சூழ்நிலை' வெளியீடு-சென்னை-21

★

விற்பனையாளர் :

அழகுப் பதிப்பகம்,

35, ஜெனரல் பாட்டர்ஸ் ரோடு,

மௌண்ட் ரோடு, :: சென்னை-2

முதற் பதிப்பு—1948
இரண்டாம் பதிப்பு—1951

★






குற்றமென்ன?......

அலுவலகப் பல்வேறு ஊழியர்கட்கும், பொதுமக்களுக்கும் இடையே தவறான கருத்து; அதிகாரிகளில், குமாஸ்தா போன்ற அலுவலாளர்களில் பெரும்பாலார்க்குள் பொறாமை, குள்ள நினைப்பு, சிறு நடத்தை! இவை அகன்றால், நிர்வாகம் ஊழல் நீங்கியதாய் செம்மைப்படுமாதலால், **'ஆட்சியின் அடியில் உள்ளவர்களின் நேர்மை உச்சியை ஒழுங்குபடுத்தும்'** என்ற நம்பிக்கையில் 'ராஜிநாமா' செய்தேன்; குற்றமென்ன?

**நா. இராசவேல்**

விலை எட்டணா

★

**பொன்னி அச்சகம்,**
தண்டையார்ப்பேட்டை, சென்னை-21

## ராஜிநாமா மிக நன்று!

மிக நன்று மிக நன்று ராஜிநாமா!
மிக்க இனிதான நடை! கதையமைப்பால்

தகும் ராசவேல் 'அலுவலகப்' படத்தை
தருகின்ருர்; நாடகத்து விருந்தினர்க்கு

நகைச் சுவையாம் பொரிக்கறிகளோடு, நெஞ்சம்
நடுக்க முறும் இரக்கத்தை ஊட்டுகின்ருர்;

அகம் தெளிந்த எழுத்தாளர் இராசவேலர்
அந்தமிழ் நாட்டார் நன்றிக்குரியாராஞர்.

— பாரதிதாசன்

ஊரும், பேரும்,
யாவும் கற்பனை

# கற்பனையூரில்......

திரை—1 சோமசுந்தரம் வீடு

[சோமசுந்தரம், தனபாக்கியம், சந்திரா, முருகேசன்]

தனம்: மணி பத்துக்கு மேலெருக்கும், இன்னமும் இந்த மனுஷனைக் காணோம். நாளைப்போலெ இப்படியே காலந்தவறி சாப்பிட்டா, உடம்புதான் என்ன ஆவறது? உத்தியோகமே பெரிசாப் போச்சி; குடும்பம் என்கிற நினைப்பேயில்லே...கச்சேரிதான் வீடு!

முரு: (குறுக்கிட்டு) அம்மா...எப்பம்மா வாங்கித்தரப் போறே? இன்னிக்கிக்கூட செல்வராஜ் ஒரு புது ஷர்ட்டு போட்டுட்டு வந்தான். ரோஸ் கலரா, அழகா இருந்தும்மா. சில்க் துணியாம்; அவங்கப்பா பெங்களூர்லிருந்து வாங்கிக்கிட்டு வந்தாராம். ஏம்மா நம்ம அப்பாவெ பெங்களூருக்குப் போகச் சொல்லும்மா.

சந்: ஆமாம். சில்க்ஷர்ட் இல்லாமதான் குறைச்சலாப்போச்சி தம்பிக்கு. படிக்கிறதில்லெ, அது வேணும், இது வேணும் இண்ணு ஏண்டா தொந்தரவு பண்றே. அவன் பணக்காரர் வீட்டுப்பிள்ளை. அவங்கப்பா வாங்கித் தருவாரு. நம்ம அப்பா ஏழையாச்சே.

முருகே: உன்னே யாரும் கேக்கலே நீ சும்மா இரு! அப்பாதான் ஏழை. அம்மா எனக்கு வாங்கித் தருவாங்க.

சந்திரா : அம்மாவுந்தான்; நம்ம எல்லாம் ஏழை தாண்டா.

தனம் : சந்திரா, நீ அதெல்லாம் சொன்ஞ அவனுக் கெப்படியம்மா தெரியும்; குழந்தை தானே, அவனெ ஒண்ணும் சொல்லாதே. முருகேசா, கொஞ்சம் சாப்டுட்டு படுத்துக்க; அப்பா வரட்டும், நாளைக்கே பெங்களூருக்குப் போயி சில்க் ஷர்ட் வாங்கிட்டு வரச் சொல்றேன்.

[சொல்லிக்கொண்டே, கைபிடித்து அழைக்கிருள்]

முருகே : (மறுக்கிருன்) ஊஹூம்! சில்க்ஷர்ட்டு வாங்கி குடுத்தாதான் சாப்டுவேன்; இல்லாட்டி சாப்பாடே வாணும் போம்மா.

[என்று கூறி, ஓடி அறைக்குள் படுத்துக் கொள்கிருன்]

தனம் : சந்திரா, அவனெ அழைச்சிக்கிட்டு வந்து உட்கார வையேன்; ஒரு உண்டையாவது சாப்டுட்டு படுத்துகிட்டும்; தூங்கிடப் போருன்.

[சந்திராவும் எழுப்புகிருள்; முடியவில்லை]

சந்திரா : அம்மா, முருகேசன் வரமாட்ரான். வேணும்னே கண்ணை மூடிகிட்டான்; நீதான் வந்து எழுப்பு.

தனம் : தினமும் ராத்திரியிலே சாப்டாமயே படுத் துட்ரான். அவங்கப்பா வந்தாவது எழுப்பட்டும்... இன்னம் கச்சேரி விடலே. எண்ணெய் கிடைக்கிற தென்னமோ துர்லபமாயிருக்கு; விடிவிளக்கு எரிய எண்ணெய்க்கி எங்கே போறது?

[சோமசுந்தரம் நுழைகிருர்; கோட்டு, ஷர்ட்டை ஷ்டாண்டில் மாட்டி, குடையை மூலையில் வைத்துவிட்டு, சோர்வுடன் சாய்வு நாற்காலியில் 'அப்பா' என்று சாய்கிருர்]

சந்திரா : அப்பா வந்துட்டாரம்மா!

தனம் : கொஞ்சம் நேரத்தோடெ வந்து சாப்டுட்டா என்ன? இந்த நாற்றமெடுத்த சோறு ஆறி அலண்டுட்டா

சாப்பிட சகிக்கிலெ; நீங்க 10-மணிக்கும், 11-மணிக்குமா வர்ரிங்க.

[உணவு பரிமாறுகிறாள்.]

சோம: நீ சொல்றதென்னமோ வாஸ்தவந்தான். அதிகாரிவ கொடுக்கிற தொல்லெயிலே நேரத்தோட சாப்பிட எங்க முடியுது. ஓயாமெ உழைக்கிறேன். நல்லபேரு இல்லேண்ணாலும் (punishment) பனிஷ்மெண்ட், பனிஷ்மெண்ட் இண்ணு வேறே, உயிரெ வாங்கரானுவ.

தனம்: சரி, எழுந்திரிச்சி சாப்டுங்க. நல்ல கச்சேரி உத்தியோகம் பண்ணி சுகம் அடைஞ்சுட்டிங்க. படிக்காதவர்கள்ளாம், வீடு வாசலோடும், நிலத்தோடும் பூமியோடும், ஏதோ கண்ணுக்கு லக்ஷணமாயில்லியா! அது அது என்ன ராங்கியாயிருக்கு......!

சோம: (சாப்பிட்டுக் கொண்டே) தனம், அதற்காக படிச்சது குற்றமில்லெ; பிறத்தியாரெ கெடுக்கிறதிலியே சந்தோஷமடையற புண்ணியாத்மாக்கள் நிறைஞ்சிருந்தா, நம்மை யொத்தவர்கள்ளாம் இப்படி துன்பந்தான் அடையணும். தனம்...குணசுந்தரம் லெட்டர் எழுதியிருக்கான், பணம் அனுப்பச் சொல்லி; காலேஜ் சம்பளம் இந்த திங்கட்கிழமைக்குள்ளே கட்டியாகணும்; பணத்துக்கு ஒரு வழியும் தோணலெ.

தனம்: இருந்ததெல்லாந்தான் மூழ்கியாச்சு. கையிலெ என்ன இருக்கு வைச்சி வாங்க. 'காலெஜ், காலேஜ்' இண்ணு குதிச் சதெப்பார்த்துட்டு, நீங்களுந்தான் அனுப்பி வச்சுட்டிங்க, நம்ம இருப்பு தெரியாமெ. சின்னதுவோ சோறும் திங்காமெ படுத்துட்டுது.

சந்திரா: செல்வராஜ் சில்க் ஷர்ட்டு போட்டுகிட்டு வந்தானும். அதெப்போலவே வேணும்ணு இவ்வளவு நேரம் ஒரே பிடியாய் பிடிச்சாம்பா.

[இதற்கிடையில் சோமு கையலம்பி விட்டு, மகனை எழுப்ப முயல்கிறார்]

சோம: டேய் தம்பி, முருகேசா! தம்பி...

[பையன் புரண்டு, புரண்டு படுக்கிறான்.]

[இராஜசேகரன், இராமநாதன், ஆல்பர்ட், ஜஹ்ரியா ஆகியோர் அமர்ந்துள்ளனர்.]

ஜஹ்ரியா : ராஜசேகரன், நீ முன்னாடியே வந்துட்டியா. என்னப்பா இந்த செக்ஷன் ஹெட் இருக்கானே சேசே, மனுஷன் தானா?

ராஜ: அடடெ, அவர் மனுஷர்தான் உருவத்திலே! நீ கொஞ்சம் தமிழ் படிச்சிருந்தா தெரியும். மக்களுளே மாக்களுண்டு!... அந்த மாக்கள் வர்க்கம்பா அவர். (மற்றவர்கள் சிரிக்கிறார்கள்) ஆனா, இத்தகைய ஆட்கள் எல்லாம் ஏன் இன்னமும் இருக்கிறார்கள் தெரியுமோ? நமக்குள்ளாகப் பெரும்பாலும் தன்மானமேயில்லாமெ, எதெச் சொன்னாலும் 'ஊம்' கொட்டிட்டு; பல்லைக் காட்டிகிட்டு, மிருகமாய்ட்ராங்க; அந்த நேரம் இவர்களெப் போன்றவர்களும் மனுஷத்தன்மையை மறந்துட்ராங்க.

இராம: சரி, சேகர்! காலையிலே உன்னிடம் என்னமோ தகராறு செய்துகிட்டிருந்தாரே, என்ன அது?

ராஜ: அதுவா? நான் [9. a. (I)] நைன். ஏ. ஒன் தற்காலிகந்தானே, அதனாலேதான். டெம்பரரியா இருந்தா கொஞ்சம் அதிகமாகத்தான் வேலை செய்யணுமாம்; வரையரை ஒன்றுமே இருக்காதாம். எல்லார்க்குமே பொதுவா (assist) அஸிஸ்ட் பண்ணாதான் நல்ல பேர் கிடைக்குமாம். அப்போதான் கொஞ்சம் (Continue) கன்டினியூ ஆக முடியுமாம். அதுவுமல்லாமே, எவ்வளவுக் கெவ்வளவு (interest) இன்ட்ரெஸ்டா பாடுபட்றமோ, அவ்வளவுக் கவ்வளவு (branch) ப்ரேஞ்செ (deal) டீல் பண்ணவும் தெரியுமாம். இப்படி ஒரு நன்மையுங் காட்டி, பழமொழி கூட இருக்கப்பா; 'கெண்டையைப் போட்டு விராலைப் பிடிப்பது'ன்னு! அந்தப் போக்கிலே அவர், அவர் பீரோ, பேப்பர்கட்டு அத்தனையும் எந்தலையிலே போட முயற்சிக்கிறார். ஏம்பா, ஏதோ செக்ஷன் ஹெட்இண்ணா ஓரளவு மரியாதெ தரவேண்டியதுதான். அதற்காக நான் எவ்வளவு

தான் சுமக்க முடியும். பல முறை (request) ரிகொஸ்ட் பண்ணியாச்சி; பயனில்லே. எவ்வளவு நாளைக்குத்தான் பார்ப்பது. சரிதாண்ணுட்டு, இண்ணிக்கி ஒரு தினுசா 'நானும் மனுஷந்தான்' இன்றதை சொல்லி வைச்சேன்; அவ்வளவுதான்.

ஆல்ப: சரி சரி, இங்கேதான் வர்ரான், கண்ணுசாமி!

இராம: ஆமாம்பா, பச்சோந்தி வர்ராம்பா!

ராஜ: ஓஹோ, கருங்காலி கண்ணுவா? (கண்ணுசாமி நெருங்குவதால், ஜஹ்ரியா, சேகரன் தொடையில் கிண்டு கிறான்.) ஏன் ராமனுதன், நம்ப கண்ணுசாமி என்னப்பா, இந்த திசையெகூடப் பார்க்கிறதில்லே.

இராம: அவருக்கும் ஆயுள் நூறப்பா.

ராஜ: அடடே! கண்ணுவா, வாங்க ஸார். ஜஹ்ரியா, கொஞ்சம் நகரப்பா. இப்படி உட்காருங்க ஸார். வந்திருக் கிறது யாருண்ணு தெரியாமெ; இவர் தயவிருந்தா தாம்பா...

கண்ணு: ஆரம்பிச்சுட்டியே சேகர்.

ஜஹ்ரி: என்னப்பா குறும்புத்தனமா பேசறே; அவர் தயவு ஏன். நம்மப்போல அவரும் ஒரு குமாஸ்தாதானே!

ராஜ: அதை யாரப்பா இல்லேண்ணு சொல்றது. சத்தியமா இவரும் ஒரு குமாஸ்தாதான். இருந்தாலும், இவர் தயவு இருந்தாதான் அதிகாரிவ தயவும். அதிகாரிக ளோடெ கொஞ்சம் நெருக்கமாயுள்ளவராச்சே, அதனுலெ தான்.

கண்ணு: சேகர்! நீ என்னமோ நினைக்கிறே; உங்களைப் போல அவ்வளவு (straight forward) ஸ்ட்ரெயிட் பார்வார்டா நடக்க என்னுலே முடியறதில்லே. என் சுபா வமே அப்படி; நான் பட்ற அவஸ்தெ உனக்கென்னமோ தெரியாது. எவ்வளவுக் கெவ்வளவு அதிகாரிகளோடெ நெருங்கிப் பழகறனோ, அவ்வளவுக் கவ்வளவு தொந்தரவு தான்; எதற்கெடுத்தாலும் கண்ணுசாமிதான்! இவ்வளவு ராப்பகலாய் உழைச்சாலும் (pleasing) ப்ளீசிங்தான் உண்டா? இந்த அதிகாரிகளே ரொம்ப மோசம்பா. தோ, பார்ரேன்; இந்த ஸ்டேட்மெண்டெல்லாம் இன்னிக்கி (due)

ட்யூ; கையெழுத்துக்கு வைச்சி (one week) ஒன் வீக் ஆவுது; இன்னும் கையெழுத்தாகலே. (speak) ஸ்பீக் இண்ணு போட்டு திருப்பிட்டாரு. நீங்க என்னமோ நினைக்கிறீங்க, என் கையிலேதான் சகலமும் இண்ணுட்டு; நாய் படாத பாடப்பா இந்த உத்தியோகம். சரி, வர்ரம்பா. கொஞ்சம் லேட்டானா சாப்பாட்லெ உட்காந்துடுவாரு...

[என்று கூறிக்கொண்டே எழுகிறான்.]

ராஜ: சரிதான் கண்ணு, போயிட்டுவாங்க.

[இராமநாதன், ஜஹ்ரியா, ஆல்பர்ட் ஆகியவர்கள் உள்ளூறவே சிரித்துக்கொண்டே, தலையை அசைக்கிறார்கள். கண்ணுசாமி பிரிந்துவிடுகிறான்.]

இராம: சேகர், நாளைப்போலெ பத்து ரூபாயாவது கிம்பளம் இல்லாமெ கச்சேரியெ விட்டு வெளியே வர மாட்டாரப்பா, இந்த யோக்கியர்!

ஆல்ப: இவனாவது தேவலியே. இன்னமும் சில பெரியவாள் இருக்கிறாங்க, அவர்களுக்கு நமக்குள்ள இந்த சம்பளம்கூட தேவையில்லே. அந்த அளவுக்கு காணிக்கையே நூற்றுக் கணக்கா கிடைக்குது!

ராஜ: ஆல்பர்ட், இவர்களும் தேவலியே. இன்னமும் அதை விடப் பெரியவர்கள் உண்டு. நமக்குள்ளவே, அதிக ஸர்வீஸ் ஆகாத (probationers) ப்ரபேஷனர்ஸ், என்னைப் போன்ற' நைன். ஏ. ஒன்கள்' இருக்கு இல்லே. இவர்கள்ளாம் ஒவ்வொரு சம்பளத்திற்கும் இவ்வளவு இண்ணுட்டு ஒரு (percentage) பெர்ஸெண்டேஜ் விகிதத்திலே (present) ப்ரெசெண்டா அவர்களுக்குத் தந்தாகணும். அப்படியே ஒப்பந்தம். நன்கொடை தராமே வாழ முடியாது! சரி, புறப்பட்லாமே. ஹோட்டல்லே சாப்ட்ரவம்பா நான்.

[நால்வரும் எழுந்து நடந்துகொண்டே]

இராம: ஹோட்டல்லே அவ்வளவு வசதியாயிருக்காதே; அதுவும் இந்த காலத்திலே.

ஆல்ப: உடம்பும் கெட்டுடும்பா.

ராஜ: இல்லே, இல்லே. உடம்பு கெட்ரதுக்குக் கொஞ்சமும் வழியில்லே. ஏன் தெரியுமா? கெடவேண்டிய அளவுக்கு மேலேயே கெட்ட பிறகு இனி கெட்ரதுக்கு என்ன இருக்கு. வெளியில் பார்க்கிறவர்கள் என்னமோ, உத்தியோகம் பண்ணுது பிள்ளே' இண்ணுட்டு பிரமாதமா நினேக்கிறுங்க! அதுவும் என்னேப்போல வெளியூரான் என்னப்பா அடைய முடியும். செலவாகிறதெ கணக்கிட்டா, நம்ம சம்பளத்திலே மிச்சம் பண்ணி குடும்பத்துக்கோ அல்லது வேறு யாருக்கோ எந்த உதவியும் செய்ய முடியாது. கடனில்லாமெ இருந்துட்டாலே போதும்பா. பொருளாதாரத்திலே இப்படி...

ஜஹ்: கச்சேரியிலோ?...

ராஜ: ஒரே ஊழல்!

[மறைகிறுர்கள்]



திரை—3 அதிகாரியின் வீடு

[பியூன்கள் மூவரில் ஒருவன் அமர்ந்தபடியே தூங்குகிறுன்-இருவர் வெற்றிலே மடித்துப் போடுகிறுர்கள். கண்ணுசாமி வருகிறுன். வருவதைக் கண்ட இருவரில் ஒருவன் எதிர்கொண்டு கைகூப்பியபடி]

கேசவன்: வாங்க எஜமான்!

கண்ணு: ஐயா தனியா இருக்காரா? யாராவது கூட இருக்காங்களா?

கேச: தனியாத்தான் எஜமான் இருக்காரு; நம்ம ரெட்டியார் பேசிக்கிட்டிருந்தாரு; இப்போதான் போனுரு. எதிர்க்க எஜமான் பார்த்திருப்பிங்களே, கார்லே!

கண்ணு: உ...ஹ...இங்க வந்துதான் போறுரா! ஐயா சாப்பிட்டாரா; என்ன செய்யாருண்ணு பாரு.

[கேசவன் உள்ளே ஓடுகிறுன். அதற்குள்ளாக மற்றெருவன்]

சீனுவாசன் : ஏன் எஜமான், போனமாச லீவு சம்பளம் இன்னமும் கொடுக்காம இருக்காங்க; நீங்க கொஞ்சம் சம்பள குமாஸ்தா கிட்ட சொல்லுங்க; ஊரைச் சுற்றி, கடனுருக்குங்க.

கேசவன் : (திரும்ப வந்து) ஐயா வரச் சொன்னுங்க எஜமான், நீங்க போங்க.

கண்ணு : சீனு, நாளைக்கு கச்சேரியிலே நினைவுபடுத்து. அந்த குமாஸ்தா கிட்ட சொல்றேன்.

[என்று சொல்லிக்கொண்டே உள்ளே நுழையப்போகிறுன். அதற்குள் அதிகாரியே வந்துவிடுகிருர்]

அதிகாரி : வா கண்ணு. அர்ஜண்ட் பேப்பர் ஏதாவது கொண்டிட்டு வந்திருக்கிங்களா? (நாற்காலியில் அமருகிருர்)

கண்ணு : ஆமாங்க. இன்னிக்கி (due) ட்யூ; (speak) ஸ்பீக்குண்ணு தாங்கள் போட்டிருந்திங்க.

[என்று சொல்லிக்கொண்டே, கட்டைப் பிரித்துக் கையெழுத்து வாங்குகிறுன்]

அதிகாரி : இந்த (petition) பெடிஷன் எப்பையா வந்தது?

கண்ணு : (one week) ஒன் வீக் ஆவுது; நம்ம M. L. A. ரெட்டியார்துதான். தங்களையும் பார்த்தேண்ணு சொன்னுர். (sanction) சேங்ஷனுக்கு எழுதியிருக்கேன்.

[என்று கூற, அதிகாரி அதிலும், மற்றும் சிலவற்றிலும் கையெழுத்து இட்டுக் கொண்டே]

அதிகாரி : ஏய்யா, சோமசுந்தரம் பிள்ளை கச்சேரியிலே என்னதான் செய்யருர்? (branch) ப்ரேஞ்செயே குட்டிச் சுவராக்கிட்டாரைய்யா. ஒரு பேப்பர் கூட புறப்பட்ரதேயில்லே. ஹெட் கிளார்க்கும் ரொம்ப (suffer) சப்பர் பண்ருர். துரையோ ரொம்ப (strict) ஸ்ட்ரிக்ட்டா இருக்கார்; இந்த மனுஷன் கவர்ன்மெண்ட் சப்பளத்தெ வாங்கிகிட்டு என்னய்யா செய்யருர்? ஹூம்...எங்கேயாவது போடாமெ, போயும் போயும் இந்த கச்சேரியிலெதான போடணும்?

கண்ணு : உண்மையிலேயே கொஞ்சம் வயசாயிட்டவர்; (retiring stage) ரிடையரிங் ஸ்டேஜி; முடியறதில்லெ. அதோடு அவர்க்கு குடும்பமேதான் கச்சேரி. அடிக்கடி லீவு எடுக்கிறதே சரியாயிருக்கும். அதிலியும் உத்தியோகம் பண்ணணும்ணு அவசியமும் இல்லே. கிராமத்திலே ஐயன் நஞ்செய் நிலமா இருக்கிறதாகவும் சொல்றாங்க. சோத்துக்கும் பஞ்சமில்லே. பையனையுந்தான் காலேஜ் ஸ்டடீஸுக்கு அனுப்பியிருக்கார். அவனும் ஒண்ணு ரெண்டு வருஷத்திலெ திரும்ப வந்து, ஒரு உத்தியோகத்திலே புகுந்துட்டாண்ணு, அவருக்கு என்ன......ஹாயா இருந்துடுவார்.

அதிகாரி : சரிதான் கண்ணு, வேஷம் போட்டா குலேச்சிதானே ஆகணும். அதெல்லாமெ...அந்த (talkative) டாக்கடிவ் ஒருவன் (temporary) டெம்பரரி இருக்கானே. அவனெப்பற்றி ரொம்ப புகார் வர்ரதே!

கண்ணு : ஆமாங்க, ராஜசேகரன்! (establishment) எஸ்டேபிளிஷ்மெண்ட் பார்க்கறாருங்க; கொஞ்சம் ஒரு மாதிரியாதாங்க பேசுவார். ஹெட்கிளார்க்குக்கும் அவருக்குங்கூட ஒருநாள் தகராறுங்க. இந்த (department) டிபார்ட்மெண்ட் அநுபவமும் போதாது. அதிலும் (Ex-military) எக்ஸ்மிலிடெரி!

அதிகாரி : (Ex-military) எக்ஸ்மிலிடெரியா இருந்தா (civil) ஸிவிலுக்கு ஏய்யா வரணும்? அங்கே மில்ட்ரியிலே மட்டும் இவர்கள் என்ன பிரமாதமா கிழிச்சுட்டது? இதுகள்ளாம் டிபார்ட்மெண்டுக்கே கொஞ்சமும் லாயக்கில்லே. என்னமோ இந்த கவர்ன்மெண்டும் இதுகளுக்கு வேறே (reserve vacancy) ரிசர்வ் வேக்கன்ஸியிலே (two third) டு தேர்ட், ஒதுக்கி இருக்கையா. இந்த பையன் ஊரெல்லாம் (wander) வாண்டர் பண்றதுதான் வேலையாம்; கச்சேரியிலியே தங்கறதில்லையாம்; ஏய்யா?

கண்ணு : ஆமாங்க. அது ஒரு (gang) கேங்க். இராமநாதன், ஆல்பர்ட், ஜஹ்ரியா இவர்கள்ளாம், (after (five, one minute) ஆப்(F)டர் பைவ் ஒன் மினிட்கூட

இருக்கிறதில்லே. ஏதாவது ஒரு D. O. (reminder) ரிமைன்டர் வந்தா, ஆள் கிடைக்கிறதே கஷ்டந்தானுங்க.

அதிகாரி: (இவ்வாறு சொல்லுகையில் ஒரு சிறு துண்டுத் தாளில் ஹெட்கிளார்க்குக்கு நோட் (note) எழுதி, கண்ணுசாமியிடம் தந்து) கண்ணுசாமி, உடனே ஹெட்கிளார்க்கிடம் கொடுத்து, நாளேயே இந்த நபர்களின் P. R. எல்லாம் (cheak slip) செக்ஸ்லிப்போடு (putup) புட்டப் பண்ண சொல்லுயா!

கண்ணு: சரிங்க. நான் வர்ரேன்.

[வணங்கிப் போகிறுன்]

அதிகாரி: டேய் சீனு...

[கூப்பிட்டுக்கொண்டே உள்ளே நுழைகிருர்.]



திரை—4 பனரஸ் ஜவுளி ஸ்டோர்ஸ்

[ஹெட்கிளார்க் கோபால்சாமி, பியூன் கோவிந்தசாமி இருவரும் ஜவுளி ஸ்டோர்ஸை நெருங்குகிருர்கள்.]

கோபா: ஏண்டா கோவிந்தா, நான் வர்ரேண்ணு சொன்னியாடா?

கோவி: சொன்னேனுங்க எஜமான். கச்சேரி விட்டதும் அப்படியே இங்கு வர்ரேண்ணு தாங்கள் சொன்னீங்கண்ணு முதலியார் கிட்டியே சொன்னேங்க. 'சரி வரட்டும்' இண்ணு முதலியாரும் சொன்ருருங்க.

[இருவரும் கடைமீது ஏறுவது கண்டு]

முதலி: (எழுந்து கை கூப்பி) நமஸ்காரம். வரணும் வரணும், ஏது இப்படி அத்திப்பூ பூத்தமாதிரி........... உட்காருங்க...

கோபால்: (அமர்ந்துகொண்டே) சும்மா, பார்த்து ரொம்ப நாளாச்சே; கச்சேரி (troubles) ட்ரபிள்ஸ்தான் எப்பவும் இருந்துகிட்டிருச்சு; இப்படி ஒருநாளேக்காவது

வெளியே வந்தாதானே, உங்களையெல்லாம் பார்க்க முடியறது.

முதலி: டேய் பையா இந்தா.

[சிறுவன் ஒருவன் வந்து நிற்கிறான். அவனை நெருங்க அழைத்து, காதோடு காதாய் எதையோ சொல்ல, பையன் வேகமாக வெளியேறுகிறான்]

புது அதிகாரி வந்திருக்காப்லே இருக்கே, எப்படியிருக்கார்?

கோபால்: அதை ஏன் கேக்கிறிங்க. உங்களுக்குத் தெரியாததா? நீங்களும் ஒங்க வயசுக்கு எத்தனை அதிகாரிகளைப் பார்த்திருப்பிங்க. அதான் பழக்கமாச்சிங்களே. எப்பொழுதும் புதுசா வர்ரவாள், முந்தியிருந்தவாளை நல்லவர்களாக்கிட்றதுதானே நம்ம அனுபவம்... அப்படியேதான் இதுவும்.

முதலி: என்ன அவ்வளவு மோசமா?

கோபால்: செ செ, அப்படியெல்லாம் ஒண்ணுமில்லெ. இவர் என்னமோ தங்கமான மனுஷ்யர்தான். ஊர் நிலவரம் அப்படி. அதிலெ என்னைப்போல ஆளுக்குத்தான் சகல தொந்தரவும். கஷ்டப்பட்ரவன் என்றைக்கும் கஷ்டப்பட்ரதுதான் ப்ராப்தமாயிருக்கு. இதே ஊர்லே, 10 வருஷத்துக்கு முந்தி, ஒரு சாமான், ஒரு துணி தேவையிண்ணு வெளியிலெ வரவேண்டியதில்லெ. ஏதோ ஹெட்கிளார்க்கு இண்ணு ஒரு மரியாதே, ஒரு கௌரவம், ஒரு செல்வாக்கு இதோடத்தான் இருந்தேன். இப்பொ என்ன இருக்கு. ஏதோ ஒங்களைப் போல ஒருத்தர் ரெண்டுபேர், நம்ம மரியாதை தெரிந்து, பழய சினேகபாவத்தோடு நடக்கிறீங்க...

[இதற்குள் சிறுவன் கிரஷ், வெற்றிலைப் பாக்கு, புகையிலை இவற்றைக் கொண்டு வந்து எதிர் வைக்கிறான். உடனே முதலியார் கிரஷ் உடைத்துத் தருகிறார்]

கோபால்: அய்யய்யே, என்ன முதலியார்வாள், இதெல்லாம் ஏன்? நம்ப சிநேகிதம் என்ன இன்று, நேற்று, சாப்பிடப்போற நேரத்திலே.

முதலி: பிரமாதமா என்ன செஞ்சுட்டேன், வெறுங் கிரஷ்தானுங்களே, சாப்பிடுங்க.

கோபால்: எனக்குத் தெரியும், இங்கே வந்தாலே நீங்க கொஞ்சத்திலே என்னை விடமாட்டிங்க இண்ணு...

[சொல்லிக்கொண்டே, கிரஷ் அருந்தி, ஏப்பம் விட்டு, வெற்றிலை மடிக்கிறார்]

முதலி: வீட்லே எல்லாம் சௌக்கியந்தானே? பிள்ளைக்கு என்னமோ இந்த வருஷம் நடத்திட்ரதா பேச்சு இருந்துதே.

கோபால்: ஆமா முதலியார்; நடத்திடணுந்தான். இன்னம் நாலு நாளையிலே ஸ்ரீரங்கத்திலிருந்து பெண் வீட்டார் வர்ரா பையனைப் பார்க்க. இவ என்னமோ இருக்கிறது போதாதுண்ணு அரிக்கிறு. அதான் இப்படி உங்களையும் பார்த்துப் போவோம் இண்ணு புறப்பட்டேன்.

முதலி: அதற்கென்ன; வேண்டிய சரக்கு வந்திருக்கு; புடிச்சதா நாலு எடுத்துக்கிட்டுப் போங்க. (திரும்பி, குமாஸ்தாவைப் பார்த்து) அந்த காணு...சாணு விலாசம் இல்லெ, அதெ எடு, ஐயா பார்க்கட்டும்.

[சொல்வதற்குள் 40, 50, சேலைகள் உயர்ந்த பட்டு—வந்து குவிகின்றன. கணக்கர் ஒவ்வொன்ருகப் பிரித்துக் காட்டி வருகிறுர். கோபால்சாமி தொட்டும், திருப்பியும் பரிசிலனை செய்கிறுர்.]

முதலி: (ஒரு சேலையைக் காட்டி) இந்த ரகம் அம்மாவுக்கு ரொம்ப புடித்தமாச்சே. ஏன்...இதுவுந்தான்...நம்ம குருசாமி வக்கீல் வீட்லே காலையிலெதான் ரெண்டு எடுத்துக்கிட்டுப் போனு.

கோபால்: ஆமாம்; இது கொஞ்சம் பார்வையாத்தான் இருக்கு; கிரயம்...

முதலி: என்ன அப்படி கேக்கிறிங்களே. முதலியார் கடை இன்றதெ மறந்துட்டிங்களா? ஓங்க விஷயத்திலே அதெல்லாம் ஒரு பிசகும் இருக்காது!

கோபால் : அதற்கு சொல்லலே முதலியார்வாள். பரி பூர்ணமா ஒங்க விஷயத்திலெ எனக்கு நம்பிக்கையுண்டு. ரொம்ப ஏத்தமா போயிட்டா, தாங்கக்கூடிய கையாயில் லியே...!

முதலி : அதெப்பற்றி கொஞ்சமும் யோசிக்காதீங்க. வேண்டியதெ எடுத்துகிட்டுப் போங்க. பணம் எங்கே யிருந்தாஎன்ன. இன்றைக்கு இண்றது நாளேச்கு...!(என்று சொல்ல ஹெட்கிளார்க் நான்கைக் குறிப்பிட, பில் எழுதப் படுகிறது) இதெல்லாம் இப்போ வந்த ரகங்க. அம்மா கட்டிப் பார்த்திங்கிண்ணு... அப்புறம் சொல்லுவிங்க. அதி கம் ஒண்ணுமில்லிங்க. எல்லாம் 347 ரூபா, சொச்சந்தான்!

[பில் தருகிறார்.]

கோபால் : (வாங்கிக்கொண்டே) டேய் கோவிந்தா, எடுத்துக்கப்பா.

[கோவிந்தன் தன் துண்டால், மூட்டை கட்டிக்கொள்ளுகிறான்]

கோபால் : உத்தரவு கொடுங்க முதலியார்.

முதலி: (எழுந்துகைகூப்பி) போயிட்டுவாங்க, எப்பவும் நம்ம விஸ்வாசம் இருக்கணும்.

[கோபால்சாமியும், கோவிந்தசாமியும் வெளிவருதல்]



திரை—5 பியூன் கோவிந்தசாமி வீடு

[கோவிந்தசாமி அஞ்சலே]

அஞ்சலே : (வீட்டு வேலே செய்துகொண்டே) தொட்டு தாலி கட்டின நாளாவா இப்படி! ஊர்லெஎல்லாம் இப்படியா இருக்காங்க.

கோவி : அஞ்சலே, நீ எதுக்கும் அஞ்சாதே. நான் ஒருத்தன் இருக்கும்போது உனக்கென்ன குறைச்சலு? எனக்குக் கலியாணம் இண்ணு ஒன்னேப் பார்க்க வரும் போது, ஒங்கப்பா, பாவம் செல்வமாத்தான் வளத்தாரு. நீயும் ஒய்யாரமாத்தான் மயிலு மாதிரி இருந்தே.

அஞ்சலே: ஆமா. மயிலு குயிலு இண்ணு சொல் லிட்டா போதும். 'நான், நீ' இண்ணு எத்தனேயோ பேர் கேட்டாங்க. என் தலையிலே...

கோவி: அஞ்சலெ! ஒங்கப்பாவுக்கு என்னெதான் பிடிச்சுது. ஏதோ கச்சேரியிலே சேவகம் பண்ற பிள் ளேக்குக் கொடுத்தா பொண்ணுக்குக் குறைச்சலிருக்காது இண்ணு நினெச்சாரு.

அஞ்சலே: நானுந்தான் நினெச்சேன், பச்சையா யிருக்கலாண்ணு.

கோவி: நினேச்சது ஒண்ணும் தப்பில்லெ. வருந் தாதே அஞ்சலெ. 32 ரூபாயிலே வயித்தைத் கழுவறதுக்கே தான் சரியாயிருக்கு......உம்...என்னெக் கட்டிகிட்டதெ, எங்க ஹெட்கிளார்க்கெ கட்டிகிட்டிருந்தா...

அஞ்சலே: சரிதான்...ஒனக்கு சத்தம் இல்லியா அத் தான், செத்தா போச்சி?

[முகத்தை சினத்தோடு திருப்பிக்கொள் கிறாள்]

கோவி: (நெருங்கி) அஞ்சலெ, தொ பார்......சும்ம ணாச்சுக்கும் சொன்னேன். அய்யய்யே, ஏன் தெரியுமா? கச்சேரியிலியே ரொம்ப கொழுக்கறவன் அவன்தான். தினத்துக்கு 50, 100 கிடைக்குது. பெரிய மனுஷாள்ளாம் வந்து வந்து கொடுக்கிறாங்க. இந்த மேல் வரும்படியே போதும். சம்பளமே தேவையில்லெ. அஞ்சலெ, ஒரு விஷயம்...பனாரஸ் ஜவுளிக்கடை இருக்கே தெரியுமா?

அஞ்சலே: வந்துதான் ஏழு வருஷமாச்சி, எதெ எனக் குத் தெரியும்.

கோவி: நம்ம ஊர்லியே பெரிய ஜவுளிக்கடெ. இப்பொ தான் நாலு சேலெ எடுத்தாரு அடடா! பட்டு சேலெ, கண்ணெப் பறிச்சிகிட்டுப் போவுது...ஹூம். (பெருமூச்சு விடுகிறான்) என்ன செய்றது. மாத்துக்கட்டுக்கும் நமக்கு வழியில்லெ; சேர்ர இடத்திலெதானே சேரும்......நம்ம நினேச்சா வருமா?

அஞ்சலை : ஏன் அத்தான், ஒண்ணே ஒண்ணு நீ வாங்கி கிட்டு வந்திருந்தா என்ன ?

கோவி : 90, 100 ஆகுதே. ஏதோ 20, 30 இண்ணு அக்கறயில்லெ... அதிருக்கட்டும். விளக்கு என்ன உள்ளப் போவுது ?

அஞ்சலை : சிசாவிலே ரவபோதுந்தான் இருந்துது, ஊத்தினேன் ; தோ நிறைய ஊத்திட்றேன் அத்தான்.

[டின்னில் உள்ள எண்ணெயை சாய்க்கிருள்]

கோவி : (உற்றுப் பார்த்து) அஞ்சலெ, அஞ்சலெ அதெக் தொடாதே. அய்யய்யோ பொட்டுகூட அதிலெ எடுக்காதே.

அஞ்சலை : ஏன், டின் நிறைய வச்சிக்கிட்டு என்ன செய்யப் போறே ?

கோவி : அது நமதில்லெயே! மருங்கூர் மிராசுதாரு சுப்பாரெட்டியாரு கொடுத்து அனுப்பிச்சாரு, ஹெட் கிளார்க் வீட்டுக்கு. நீ அகலெ ஏத்து.

அஞ்சலை : (அகலை ஏற்றிவிட்டு) அவரு என்ன, அவ்வளவு பெரியவரா அத்தான் !

கோவி : ஆமாமாம், பழைய பெருச்சாளி ! கச்சேரியிலியே அவரு வைச்சதுதான் சட்டம். குமாஸ்தால்லாம் கூட பயப்படுவாங்க. அதிலும் அஞ்சலெ...சோமசுந்தரம்பிள்ளை ஒருத்தர், பாவம்...குடும்பஸ்தன்...ரொம்ப வயசான மனுஷன் ! அவரெ என்ன பாடுபடுத்தறுன் தெரியுமா ?...ஆவ வொட்ரதேயில்லெ, ரொம்ப திமிரு பிடிச்சவன் ; லீவு கேட்டாகூட கொடுக்கிறதில்லெ.

அஞ்சலை : அவருதான் அதிகாரியா அத்தான் ? யாரோ புதுசா வந்திருக்காரு இண்ணு சொன்னியே !

கோவி : புதுசா வந்திருக்கிறவருதான் அதிகாரி.

அஞ்சலை : அவரு ஒண்ணும் கேக்கறதில்லியா ?

கோவி : அவருக்கென்ன அஞ்சலெ தெரியும். கச்சேரிக்கி வந்தாபில்லெ. அவரு வீட்லியேதான் இருப்பாரு.

இங்கெ இவன் வச்சதுதான் எதுவும். அதிகாரிவ, இவன் சொல்றதெதான் நம்புவாங்க. காலமே அப்படியிருக்கு!

அஞ்சலை: சரி, அனுபவிப்பான் பாவி. விளக்கிலெ எண்ணெயில்லெ; சாப்டுடு அத்தான்.



திரை—6 அலுவலகம்

[வெளித்தாழ்வார ஓரம். கல்லாபெட்டியைப் போன்ற பெட்டி ஒன்று. பக்கத்தில் சிறு அல்மேரா, பல தட்டுகள் உடையது. தலைப்பாகையுடன் தலைமை சேவகன் அமர்ந்திருக்க, சில பியூன்கள் சூழ்ந்துள்ளனர். பொதுமக்கள் நடமாட்டம்—பேச்சு. தலைமை சேவகன், பியூன்களிடம் ஆர்ப்பாட்டம். உட்புறம்-காரியாலயம் ஹால்—பல குமாஸ்தாக்கள்-மத்தியில் ஹெட் கிளார்க்கு-எதிரில் இரு நாற்காலிகளில் பெரிய மனிதர்கள் — (parties) உரையாடல்]

பார்ட்டி: கொஞ்சம் நீங்க மனசு வைச்சிங்கண்ணு இது என்ன பிரமாதம்! உண்மையிலியே சொல்றேனுங்க; தங்களுக்குத் தெரியாததில்லெ; நீங்க ஒரு ரெண்டு மாதம் லீவிலே இருந்துட்டிங்க; கச்சேரி பக்கமே வர்ரதுக்குக் கொஞ்சமும் விரும்பலெ. சின்ன சின்ன பிள்ளைங்கள்ளாம் குமாஸ்தாவா வந்துட்டுது. என்னதான் படிச்சுட்டு இருந்தாலும் அநுபவம் இருக்கணுமில்லெ? உங்ககிட்ட இண்ணுலே வர்ரவாளுக்கும் ஏதோ ஒரு பாத்தியதெ; நீங்களும் ஒங்க காரியமா ஒரு விணுடியிலெ முடிச்சு தருவிங்க.

ஹெட்: ஆமாமாம். நீங்கதான் பாருங்களே. என்னைப்போல ஏதோ ஒருத்தர் ரெண்டுபேர் தவிர எல்லாம் சிறுபிள்ளைகள்தான். (Parties) பார்ட்டீஸ் வந்தா, அவாள் அந்தஸ்து, போக்குவரத்து எல்லாம் அதுகளுக்கென்ன தெரியும். அதுவும் இந்த காலத்து படிப்பு படிச்சிபுட்டா

என்னத்தே கண்டுது?...சரி, ஓங்களெ ரொம்ப நேரம் நிறுத்திட்டேன். அந்த 'பெடிஷன்' ஒண்ணு, அது விஷய மாத்தானே!

[குடியானவன் ஒருவன் – முழங்கால் வேட்டிக்குமேல் துண்டொன்று கட்டிய படி, கைகூப்பி 'நமஸ்காரங்க!' என்கின்றான். ஹெட்கிளார்க்கு தலைநிமிர்ந்து பார்த்து மீண்டும் பழைய பார்ட்டியிடம் கவனஞ் செலுத்துகிறார்]

பார்ட்டி: ஆமா, தங்களுக்கு எவ்வளவோ இருக்கு; ஓயாத வேலெ; ஓங்களெ இப்படி பார்த்துகிட்டுப் போனா தங்களுக்கு நினைவிருக்குமே என்றுதான்.

[ஐந்து பத்து ரூபாய் நோட்டுகளை மடித்து, டேபிள்மேல் உள்ள புத்தகமொன்றைத் தூக்கி, அதன்கீழ் வைக்கிறார்]

ஹெட்: (அதைப்பார்த்துக்கொண்டே அலட்சியமாய்) அதைப்பற்றி நீங்க கவலைப்படத் தேவையில்லெ. அதை நான் கவனிக்காமலா இருக்கேன்? இந்த வாரத்திலியே சேங்கஷன் ஆயிடும். நீங்க ஒண்ணும் பிரயாசப்பட வேண்டாம்.

பார்ட்டி: (எழுந்து கைகூப்பி) உத்திரவு வாங்கிக்கிறேன். ஏதோ தங்கள் தயவுதான்.

ஹெட்: போயிட்டு வாங்க; தயவு இல்லாமயா!

[பார்ட்டியுடன் வந்த மற்றொருவரும் கைகூப்பி, தலையசைக்க, இருவரும் செல்கின்றனர்]

குடியான: (மீண்டும்) எஜமான், மேல்சாவடிங்க.

ஹெட்: மேல் சாவடிக் கென்னயா, எறிஞ்சா போச்சு.

குடியான: இல்லிங்க. மரப்பட்டா ஒண்ணு, எஜமானுக்கு விண்ணப்பம் செய்திருக்கேனுங்க.

ஹெட்: ஆமாம், அதுக்கென்ன? இப்படி அடிக்கொருவனு தினம் நூறுபேரு வந்து பிராணனே வய்யா வாங்கிறீங்க. உங்களுக்கு வேறெ எழவு, பதில் சொல்ற தேவா உத்தியோகம்?

குடியான: இல்லிங்க, விண்ணப்பம் கொடுத்து ரெண்டு மாசம் ஆவுதுங்க.

ஹெட்: அதனுலெ என்ன, முழுகியா போச்சு? ரெண்டு மாசந்தானே. இங்கே கூடத்தான் 2 வருஷத்து பேப்பர் எவ்வளவோ இருக்கு; எல்லாம் உத்தரவு போடும் போதுதான் போடணும். போய்யா போ!

குடியான: என்னமோ, எஜமான் கெஞ்சம் பெரிய மனசுவச்சு.........

ஹெட்: சரிதான். கச்சேரியா என்ன. பெரிய மனசு வைச்சு நீ வெளியே போய்யா...டேய் ரங்கசாமி, இதென்ன கச்சேரியா, லக்ஷ்ணமாவா இருக்கு. கண்டவனல்லாம் உள்ள உட்டுட்டு என்னடா பண்றிங்க.

[குடியானவன் வெட்கத்தோடும், வருத்தத்தோடும், அச்சத்தோடும் வெளி வருகிருன்]

ரங்கசாமி: (ஓடிவந்து) ஏன் எஜமான்!

ஹெட்: கச்சேரி எந்தகதியானு உங்களுக் கென்னடா? ரெண்டணுவுக்கும், நாலணுவுக்கும் எவன் வருவான் இண்ணு கண்கொட்டாமெ பார்த்துகிட்டிருங்கடா.

ரங்க: அப்படியெல்லாம் ஒண்ணுமில்லிங்க எஜமான். எங்களுக்கு யார் எஜமான் ஒரு சல்லிக் காசு தர்ரான்?

ஹெட்: சரிதாண்டா. ரொம்ப சட்டம் தெரிஞ்சவண்டா நீ. அந்த A ஒண்ணெ கூப்பிடு.

ரங்க: (சோமுவிடம் வந்து)ஹெட்கிளார்க்கு எஜமான் கூப்பிட்ராருங்க.

[சோமு ஹெட்கிளார்க்கிடம் வருகிருர்]

ஹெட்: சோமுவா! நீங்க பண்ற அழும்புலெ நூறு சார்ஜுக்கு நான் இல்லே (explanation) எக்ஸ்ப்ளனேஷன் தரவேண்டியதாயிருக்கு. உங்களுக்காக எவ்

வளவோ (request) ரிகொஸ்ட் பண்ணியும் வியர்த்தமா போச்சி. துரை என்ன, கொஞ்சத்திலே ஒப்றவரா? இப்படி (orders) ஆர்டர்ஸ் பாஸ் பண்ணிட்டார். எந்த பழிக்கும் நான் தான் ஆள்.

[சொல்லிக் கொண்டே ஆர்டர்ஸைத் தந்து, மற்ருென்றில் கையொப்பம் வாங்குகிருர். சோமு வாங்கி, பின் புறத்தைத் திருப்பி, கடைசியாகப் பார்த்ததும் முகம் சிறிது மாறுகிறது]

சோமு: சரிதான். 'பட்ட கால்லியே படும்' என்பது தான் பழமொழியும். என்னமோ ஒங்க ஒத்தாசை. ரெண்டு வருஷம் (increment) இன்கிரிமெண்டெ நிறுத்தியாச்சி. பிள்ளெ குட்டிக்காரன். ஏதோ நீங்கள் தான் சௌக்கியமா இருங்களேன்.

ஹெட்: சோமு, உங்க சுபாவமே இதுதான். எனக்குத் தெரியுமே. பழிஓரிடம், பாவம் ஓரிடம் இண்ணு, இதற்கு நாஞ ரெஸ்பான்ஸிபிள்? உமக்காக நான் எவ்வளவு பாடுபட்டேண்ணு நான் சொன்ஞவா நீர் நம்பப்போறீர். செ சே, நன்றிகெட்ட மனுஷன் அய்யா நீர்!

சோமு: நாஞ நன்றிகெட்டவன். எதற்கும் ஒருவன் இல்லாமயா போயிட்ருன்?

[தன் நாற்காலியில் வந்து அமர்கிருர். திரும்பத்திரும்ப அந்த உத்தரவையே வாய்க்குள் படித்துக் கொள்கிருர். இதற்கிடையில் தபால்காரர் வந்து, ஒரு சில குமாஸ்தாக்களுக்கு கடிதங்கள் தந்து சோமுவுக்கும் கவர் ஒன்று தந்து செல்கிருர். சோமு, கவரைப் பிரித்துப் பார்க்கிருர். முகத்தில் விசனக்குறி. சிறிது தடுமாற்றத்தோடு ஒரு துண்டுத் தாளில் லீவு எழுதி, ஹெட் கிளார்க்கிடம் சென்று, அவர் பார்க்க மேசை

மீது வைத்துவிட்டு, மீண்டும் தன் இடம் வந்து பிரேஞ்சை மூடி வெளிப்புறப் படுகிறர்]



திரை—7 அதிகாரியின் வீடு

[சோமு வருகிறர். பியூன்கள் இருவரில் கேசவன் வரவேற்கிறன்]

கேசவன் : (கைகூப்பி) வாங்க எஜமான்.

சோமு : ஐயா இருக்காரா ?

கேச : இருக்காங்க எஜமான்.

சோமு : ஏதாவது முக்கிய வேலையா இருக்காரா ?

கேச : இல்லிங்க. பேப்பர்தான் படிச்சிகிட்டு இருக்காருங்க. நீங்க போயி பார்க்கலாம் எஜமான்.

[சோமு அதிகாரியிடம் செல்கிறர். அரவங்கேட்ட அதிகாரி, கண்ணைமட்டும் உயர்த்தி, விழித்துப் பார்க்கிறர்]

அதிகாரி : வாங்கய்யா, சர்வீஸ்லே நீங்கள்ளாம் இருந்துகிட்டு ஏனைய்யா அவஸ்தெப் படணும்? என்ன விசேஷம்?

சோமு : ஒரு (request) ரிக்கொஸ்ட். என் மதரின் லாவுக்கு (Mother-in-law) ரொம்ப (serious) சிரியஸா இருக்குண்ணு லெட்டர் வந்திருக்கு. ஒரு மூன்று நாளைக்கி லீவு எழுதி ஹெட்கிளார்க்கிடம் கொடுத்துட்டு வந்திருக்கேன்.

அதிகாரி : பொழுது விடிஞ்சா லீவு கேக்கிறதே வேலையாயிருந்தா, கச்சேரிவேலை யாருங்கையா செய்யறது? D. O. மேலே D. O. வா வந்திட்டிருக்கு. (business statement) பிஸினெஸ்டேட்மெண்டு வேறே அனுப்பியாகலே. ஒருகாரியமும் நடக்கலே; லீவு, கீவுண்ணுகிட்டு பேசாதீய்யா.

சோமு : தாங்கள் அப்படி சொல்லப்படாது. ஏதோ முடிஞ்சவரையிலெ டிஸ்போஸ் (dispose) பண்ணிகிட்டு

தான் இருக்கேன். இந்த சமயம் கொஞ்சம் (mercy) மெர்ஸி வைக்கணும்.

அதிகாரி: முடிஞ்ச வரையிலெ இண்ணு, முடியாததெ நான் பார்க்கணுமா என்ன? நீர் என்னய்யா (senseless) ஸென்ஸ்லெஸா பேசுறீர். ப்ரேஞ்செ இந்த கண்டிஷன்லெ வச்சுக்கிட்டு, எப்படியா லீவு கேக்க வந்தீர்?

சோமு: தங்கள் தயவுதான். ஒருநாள் (grant) க்ரேண்ட் பண்ணுலும் போதும். போய் பார்த்துட்டேனும் திரும்ப நாளையே (return) ரிடண் ஆயிட்றேன். கொஞ்சம் (consider) கன்சிடர் செய்யணும்.

அதிகாரி: It is only your mother-in-law. No consideration; I can't help you......

சோமு: (one day) ஒன்டே' தான் கேக்கறேன்... தாங்கள்...கொஞ்சம்...

அதிகாரி: Even for that......I can' t.

[என்று சொல்லிக் கொண்டே எழுந்து உள்ளே சென்று விடுகிறார். சோமு பெரிய ஏமாற்றத்துடனும், வருத்தத்துடனும் திரும்புகிறார்]



திரை 8 — சோமசுந்தரம் வீடு

[தனம் வீட்டு வேலைகளை செய்கையில், பையன் குறுக்கிட்டுத் தொந்தரவு செய்கிறான்]

தனம்: சந்திரா, தம்பியெ கூப்புடு. அந்த பெட்டியெ வாசிச்சிகிட்டு ஒரு பாட்டு தான் பாடேன்........போப்பா, போயி அக்கா பாடுவா; நீயும் பாடு போ.

சந்திரா: முருகேசா, தோ பாரேன். நான் பெட்டி வாசிக்கப் போறேன்.

[என்று சொல்லிக்கொண்டே, ஹார்மோனியத்தை எடுத்து வாசிக்கத் தொடங்குகிறாள். பையனும் ஓடிவந்து எதிர் அமர்கிறான். சந்திரா பாடுகிறாள்]

இராகம்—சண்முகப்ரியா தாளம்—ஆதி

(எடுப்பு)

'இல்லை' எனும் நிலையைக் கொல்லாயோ?-உலகே
'இரக்கம்' எனும் மொழியைக் கல்லாயோ? (இ)

(துணை எடுப்பு)

தொல்லை தவிர வேறு தோன்றுதோ?
தூய்மை நிலவ இது சான்றுமோ? (இ)

(அடி)

நல்ல நெஞ்சம் நசுங்கி மாய்ந்ததுவோ?
நவிலும் ஏடே இலாது தீய்ந்ததுவோ?
வெல்லும் பொதுஉடைமைக் குறி எதுவோ?
வறுமைப் பிணி ஒழிக்கும் வகை அதுவோ? (இ)

[முடிவடையும்போது, சோமு உள் நுழைகிறார். சோர்வுடன் சாய்வுநாற்காலியில் 'தனம்' என்று அழைத்துக் கொண்டே சாய்கிறார். இதற்குள் தந்தையைக் கண்ட முருகேசன் ஓடி வந்து அணைத்துக்கொண்டே]

முரு: அப்பா! எங்கப்பா மூணுசக்கர சைக்கிளு? அக்காவுக்கு மட்டும் அர்மோனியப் பெட்டிய...

சோமு: வாங்கித் தரண்டா கண்ணு. அக்காவுக்கு ஆர்மோனியப்பெட்டி நானு வாங்கித் தந்தேன்? ஒன் அத்தையில்லப்பா வாங்கிக் குடுத்தது... நீ போயி தெருவிலெ விளையாடு; கொஞ்சம் நான் படுக்கப்போறேன்; போப்பா.

[முருகேசன் வெளியில் ஓடுகிறான். தனம் வந்துகொண்டே வியப்போடு]

தனம்: ஏது இன்னிக்கி இவ்வளவு சீக்கிரமா வந்துட்டீங்க!

சோமு: ஒண்ணுமில்லெ. ஒன் தாயாருக்கு உடம்பு ரொம்ப பலஹீனமா இருக்காம்; படுத்த படுக்கையிலியே

இருப்பதா...சிவப்ரகாசம் லெட்டர்எழுதியிருக்கான். பத்து நாளா சோறு தண்ணியும் இல்லியாம். இந்தப் படுபாவி லீவு கொடுக்கவும் மறுத்துட்டான்.

தனம்: அய்யயோ, அம்மா...வயசான காலத்திலெ, பிள்ளெ பிள்ளெண்ணு ஏன்தான் கட்டிகிட்டு அழறியோ... இங்கெ இருந்து போயிட்டினுலும் என் கையாலியே எடுத்துப் போட்டுடுவனே...ஐயோ...அம்மா...(புலம்பல்)

[சந்திரா நெருங்கிவந்து நிற்கிருள், தந்தை முகத்தைப் பார்த்துக்கொண்டே]

சோமு: (சிறிது பொறுத்து) தனம், வீணு புலம்பறதிலே என்ன கூடிவரப்போவுது. எனக்கும் லீவு இல்லேண்ணு சொல்லிட்டான். பையனெ அழைச்சிகிட்டு நீபோ. சௌக்கியமா தெரிஞ்சிதுண்ணு ரெண்டுநாள் இருந்து பார்த்துகிட்டு, கையோடெ அழைச்சிகிட்டு வந்துடு; ஏதாவது ஒரு மாதிரியாயிருந்தா, உடனே ஒரு தந்தி கொடுத்துடு. புறப்பட்டு வர்ரேன். வேறெ என்னதான் செய்யறது?

தனம்: (சிறிது தெளிந்த குரலில்) சரி, அப்பொ இந்த ஒருமணி வண்டிக்கே ஏத்தியனுப்பிடுங்க.

சோமு: கையிலியோ பணம் இல்லெ. யாரிடமாவது கைமாத்துதான் வாங்கணும்.

[ராஜசேகரன் வருகிறுன்]

சோமு: வா சேகர்! இப்படி உட்காரு.

சேகரன்: என்ன ரொம்ப கவலேயாயிருக்கிங்க.

[சந்திராவும், தனமும் சிறிது ஒதுங்குகிருர்கள்]

சோமு: என் மதரின்லாவுக்கு ரொம்ப சீரியஸா இருக்காம். வீட்லெ அனுப்பி பார்த்துகிட்டு வரச்சொல்லலாம் இண்ணு...பணமுடை வேறே...அதான் ஒண்ணும் புரியிலெ...உனக்கு நம்ம சஞ்சிவிராவ் வீடு தெரியுமே? சந்நதி தெருவிலே இருக்கு.

சேகர்: இப்போ லீவிலெ இருக்காரே, அவர்தானுங்களே. தெரியும். தகவல் என்ன சொல்லுங்க.

சோமு: ஒரு லெட்டர் தர்ரேன். இந்த தகவலெ சொல்லி நான் ரொம்ப அவசியமா கேட்டேண்ணு வாங்கிட்டு வரணும். கொஞ்சம் போயிட்டு வந்துடு. (excuse) எக்ஸ்யூஸ் பண்ணிக்கோ சேகர்.

சேகர்: 'எஸ்க்யூஸ்' என்ன இருக்கு. நீங்க எழுதி கொடுங்க ஸார்.

[சோமு அவசரமாக எழுதித் தருகிறார். சேகரன் வாங்கிக்கொள்கிறான்]

சேகர்: இதோ நான் சீக்கிரத்திலெ வந்துட்றேன்.

[போகிறான்]



திரை—9 சஞ்சீவி ராவின் வீடு

[வெளித் தாழ்வாரத்தில் ராவ் பத்திரிகை படித்துக்கொண்டிருக்கிறார். சேகர் வருகிறான்]

சேகர்: (Good morning) குட்மார்னிங் ஸார்!

சஞ்சீவி: ஓ! வா ராஜசேகர். சௌக்கியமா?...... உட்கார்.

சேகர்: சௌக்கியமில்லெ. ஆனா, இந்த நாட்டுவழக்கத்துக்கு மாறு சொல்றேண்ணு நீங்க நினைப்பிங்க. உண்மையிலியே ஒவ்வொருத்தர் வாழ்க்கையிலும் எவ்வளவு குறைகள் இருந்தாலும், அத்தனையும் மறைச்சிகிட்டு சௌக்கியமா? இண்ணு கேட்டதும் உடனே, சௌக்கியந்தான் இண்ணு போலித்தனமா சொல்லுவதே ஒரு வாடிக்கையாயிருக்குங்க!

சஞ்சி: (fact) பேக்ட், நீ சொல்றதென்னமோ வாஸ்தவந்தான்.

சேகர்: நான் ஒரு தகவலா வந்தேன். நம்ம சோமசுந்தரம் ஒரு லெட்டர் கொடுத்தார்!

[என்று சொல்லி லெட்டரைத் தருகிறான். அவர் வாங்கி வாய்க்குள் படித்துவிட்டு]

சஞ்சீ : என்ன ராஜசேகர். அடடா! அவர் (life) லைபெ நினைச்சா ரொம்ப கஷ்டமாயிருக்கு. நானும் அவரும் (class mates) களெஸ்மேட்ஸ்; அவருடைய (young-age) யங் ஏஜ்லெ நல்ல (personality) பெர்ஸனேலிடி. (neat) நீட்டா (dress) ட்ரெஸ் பண்ணுவார். ஆபீஸ் ஒர்க்லியும் அப்படி தான். ஆபீஸிலியே அவராலேயாருக்குமே ஒரு தொந்தரவும் கிடையாது. இப்ப மனுஷன் பாவம், ரொம்ப (suffer) சப்பர் பண்றுரு.

சேகர் : நல்ல மனுஷன் ஸார். வயசும் ஆயுட்டுது. கடைசி காலத்திலெ,இப்பதான் மேலமேலெ(punishment) பனிஷ்மெண்டு. ரெண்டு வருஷத்துக்கு (increment-stoppage) இன்க்ரிமெண்டும் ஸ்டாப்பேஜ் ஆயுட்டுது.

சஞ்சீ : ஹாம்... (is it a fact) ஈஸ் ட் எ பேக்ட்? இது என்ன கதி. இந்த ஹெட்கிளார்க்கின் சில்மிஷமா என்ன?

சேகர் : ஆமாம் ஸார். எல்லாம் அந்த பரோபகாரி ஒருவர் இருக்காரே, அவர் கைங்கரியம் தான். இந்த (orders) ஆர்ட்ஸ் வாங்கியதுந்தான், ஊர்லிருந்தும் லெட்டர் வந்தது, அவர் மதரின்லா ரொம்ப சீரியஸா இருக்கிறதா. வீட்லியோ அந்த அம்மா ஒரே துடிப்பாயிருக்காங்க. அதற்காகவேதான் இந்த லெட்டர் எழுதிக்கொடுத்தார்.

சஞ்சீ : ரொம்ப தர்மசங்கடமானநிலே, சேகர். நானுந்தான் லீவிலேஇருக்கேன் .மூன்றுமாதமா,இன்னமும் லீவும் சேங்ஷனுகலே; இப்படி அழும்பு பண்றுனுங்க. மேலமேலே கடன் வாங்கிதான் காலக்ஷேபம் பண்ணி கிட்டுவர்ரேன். இனி கடன் வாங்கவும் வழியில்லே. நிர்வாகம் அப்படியிருக்கு...அய்யயோ...ரொம்ப சங்கடப்படுவாரே...நம்பிக்கையோடில்லெ எதிர்பார்ப்பார்... (சிறிது மௌனம்) சேகர்! நானும் கைவிரிச் சுட்டேண்ணு, சோமு ரொம்ப மனசு வருந்துவார். வேறு வழியில்லெ. என் (wife) ஒய்புது தோடு தர்ரேன்...எவ்வளவு எழுதியிருக்கார்?

[என்று சொல்லிக் கொண்டே கடிதத்தை மீண்டும்பார்த்து]

(twenty five) 'ட்வொன்டிபைவ்' தானே, பேஷா தரு வான்; நம்ப கேசரிராஜ்கிட்டே வச்சி வாங்கிகிட்டுப்போ. ஆனா ஒண்ணு. (purse) பர்ஸ்லிருந்து தந்தேண்ணுமட்டும் சொல்லு. இப்படி யெல்லாம் நகைவிஷயம் சொன்னா, ரொம்ப புண்படுவார்.

சேகர்: சரி...ஹாம்...நானாவது ஏதாவது (save) சேவ் பண்ணியிருக்கனா, அதுவுமில்லெ.

சஞ்சீ: இந்த உத்தியோகங்கள்லே நாங்களே (retire) ரிடையர் ஆகப்போறோம். எங்க நிலையே இப்படியிருக்கே. நீயோ வெளியூர்; ஹோட்டல்லெ சாப்டுகிட்டு, எவ்வளவோ அசௌகரிங்கள்ளாம் இருக்கு. பணம்தானா உதவி. ஏதோ ஒரு ஆறுதலா இருக்கிறதே போதாதா...(wait a minute) வெய்ட் எ மினிட்.

[என்று சொல்லிக்கொண்டே உட் சென்று, உடனே திரும்பிவந்து, தோடு தருகிறார். ராஜசேகரன் பெற்றுக்கொள் கிறான்]

சேகர்: நான் வர்ரேன் ஸார். அவர்களெ அனுப்பி வைச்சுட்டு, மீண்டும் உங்களை வந்து பார்க்கிறேன்.

[வணங்கி வருகிறான்]



திரை—10 சோமு வீடு

[சோமுவும், சேகரனும் பேசிக்கொண் டிருத்தல்]

சோமு: பையனையும், தனத்தையும் பத்திரமா போங்க இண்ணு சொல்லிட்டு வந்தியா? (train move) ட்ரெயின் மூவான பிற்பாடுதானே வந்தே. பையனெ அவளாலே சமாளிக்க முடியாதே என்ற கவலைதான். கொஞ்சம் துடுக்கு!

சேகர்: அதெப்பற்றி ஏன் கவலைப்பட்றிங்க. இன் றென்னமோ ட்ரெயின்லியும் அவ்வளவு 'ரஷ்' இல்லை; கொஞ் சம் வசதியாத்தான் இருந்தது. இந்நேரம் செங்கல்பட்டு

தாண்டிட்டு இருப்பாங்க. போய் சேர்ந்ததும், உடனே லெட்டர் போடவும் சொல்லியிருக்கேன்.

[தந்தி பியூன் சைகிளில் வந்திறங்கி, மணியடித்துக் கொண்டே]

தந்தி-பி: ஸார், ஸார்!

சோமு: யாரது, கச்சேரியிலிருந்தா!

சேகரன்: யாரப்பா அது. (வெளியில் வந்து ஆளைப் பார்த்ததும்) என்ன, தந்தியா?

தந்தி-பி: ஆமாம். சோமசுந்தரம் பிள்ளைக்கிங்க.

[அதற்குள் சோமுவும் வெளிவந்து விடுகிறார்]

சோமு: என்னமோ, இவ இப்பொதான் போரு!

[என்று சொல்லிக்கொண்டே, வாங்குகிறார்; பிரித்துக்கொண்டே உள்ளே வருகிறார். தந்தி பியூன் வைத்திருந்த வேறொரு தாளில், சேகரன் கையெழுத்திட, பியூன் பறக்கிறான். சோமு சாய்வு நாற்காலியில் அமர்ந்துகொண்டே படித்து, அப்படியே தலைமீது கைவைத்து மௌனமாகி விடுகிறார்]

சேகரன்: என்ன ஸார் விஷயம்?

[சோமு, தந்தியை சேகரனிடம் தருகிறார். சேகரன் படிக்கிறான்]

"Sivabakyam died
Start with family, 'Sivaprakasam'

[முடித்ததும், சேகரனும் மௌனமாக இருக்கிறான். உள்ளிருந்த சந்திரா, விரைவாகத் தந்தையிடம் ஓடிவருகிறாள். அதைக்கண்ட சேகரன் சிறிது விலகி, தூரம் வந்து நிற்கிறான்]

சந்திரா: (நெருங்கி) அப்பா, ஆயாவா இறந்துட்டாங்க, என் அப்பா!

[என்று தேம்பலோடு கூறி, தந்தையின் எதிரில் மண்டியிட்டு காலின் இடுக்கில் முகத்தைப் பொருத்தி அழுகிறாள். சோமு தலையைத் தூக்கி, கண்ணைத் துடைக்கிறார்]

சோமு : கண்ணு, சந்திரா, அழாதேம்மா... அழாதே. சொன்னா கேளு... அடுத்த வண்டிக்கே போவலாம். 'கெட்ட குடியே கெடும்' என்பதுதான் பழமொழியாச்சே! உங்க மேலெ அந்த அம்மாவுக்கு உயிர்தான்; என்ன செய்றது. போ எழுந்திரம்மா. அறைக் கதவு, தோட்டத்துக் கதவு எல்லாம், பார்த்து நல்லா தாழ்ப்பா போடு.

[சந்திரா உள் செல்கிறாள். சேகர் நெருங்கி வந்து]

சேகர்: அடுத்த வண்டியிலே போவதாயிருந்தா கொஞ்சம் சீக்கிரமா தயாராகணும்.

சோமு : (arrangement) அரேன்ஜ்மெண்ட் என்ன இருக்கு. (daughter) டாட்டரையும் அழைச்சிகிட்டு, வீட்டெ பூட்டிகிட்டு போக வேண்டியதுதானே. ட்ரெயின் எப்போ (arrival) அரைவல்?

சேகர் : (four fifteen) போர் பிப்டீனுக்குதான் வருது. இன்னம் ஒருமணி நேரம் இருக்கு.

சோமு : இவ்வளவு கஷ்டமிருந்தாலும் சேகர், ஏதோ ஒருவாறு சகிச்சுடலாம் போலிருக்கு, இந்த அதிகாரிகள் பண்ற கொடுமைக்கி. ஒரு நாள் க்ரெண்ட் பண்ணாலும் போதுண்ணு எவ்வளவோ ரிகொஸ்ட்பண்ணேன், மறுத்துட்டார். இப்ப, இந்தப் பயணம் தவறவே கூடாது. லீவு எழுதித்தரேன். தயவுசெய்து ஹெட் கிளார்க்கிடம் ஒப்படச்சுடு. சேகர், உனக்கும் என்னாலே எவ்வளவோ பிரயாசை!

சேகர் : பிரயாசை ஒண்ணுமில்லே; நீங்க எழுதி கொடுத்துட்டு சீக்கிரம் புறப்படுங்க. இந்த டிரெயின் (miss) மிஸ்ஸாயிட்டா வேறு வழியேயில்லெ.

[உடனே சோமு, துண்டுத்தாள் ஒன்றில் லீவு எழுதி சேகரனிடம் கொடுத்துக் கொண்டே]

சோமு : மூன்று நாளைக்கி எழுதியிருக்கேன்; இந்த (fact) பேக்ட் எல்லாம் கொஞ்சம் (detail) டிடெய்லா சொல்லு சேகர்.

சேகரன் : அதைப்பற்றி நீங்க ஏன் கவலைப்பட்றீங்க. லீவு கிடைக்கலே இண்ணுதான் என்ன ஸார் தலை முழுகிப் போச்சி! புறப்படுங்க.

[உடனே சந்திரா சிறு ட்ரங்குடனும் சோமு அங்கவஸ்திரம் குடையுடனும், மூவரும் வெளிவந்து, கதவைப் பூட்டிப் புறப்படுகின்றனர்]



திரை—11 அலுவலகம்

வாடிக்கையான கூச்சல், நடமாட்டம்.

[இராஜசேகரன் தன் இடத்திலிருந்து எழுந்து ஹெட் கிளார்க்கிடம் சென்று லீவு லெட்டரைத் தருகிறான். ஹெட் கிளார்க் படித்துப் பார்த்து]

ஹெட் : தினமும் இந்த மனுஷனுக்கு ஏதாவது எழவு வந்துகிட்டே இருக்கும். லீவு கொடுத்துகிட்டேயிருந்தா, கச்சேரியா, இது தர்மசத்திரமா இண்ணே தெரியிலே. அதிலியும் கச்சேரிக்கு வந்து சொல்லிட்டுப் போகவும் அவராலே முடியிலே; அவருக்கு (representative) ரிப்ரெஸெண்டேடிவா இவரை அனுப்சுட்டாரு.

சேகரன்: காலையிலெ, முதல்லெ அவர் ஒய்ஃபையும் ஸன்னையும் ஊருக்கு அனுப்பிவைச்சாரு. உடனே பின்னு வியே (died) டைட் இண்ணுட்டு தந்தியும் வந்துட்டுது. அவர் என்ன செய்வார், ஸார். நிலைமை அப்படியாயிட்ட திலே என்னிடம் கொடுத்து உங்க கிட்டியும் ரொம்ப ரிகொஸ்ட் பண்ணிகிட்டதா சொல்ல சொன்னாருங்க...

ஹெட் : அவர் சொல்லிட்டுப் போயிட்டாரப்பா! ப்ரேஞ்ச் ஓர்க் சப்பர் (suffer) ஆகிறதெ யாரப்பா பார்க்கிறது? நீயா பார்க்கப்போறே!

சேகர் : நான் எப்படி ஸார் பார்க்க முடியும்? ஏதோ ஒரு கச்சேரியிலெ ஒருவர்க்கொருவர் இந்த சிறு உதவிகூட, அதுவும் அசந்தர்ப்பத்திலெ செய்யப்படாதா ஸார்?

ஹெட் : சேகர், நீ ரொம்ப இலக்கணம் படித்தவன்; சட்டம் பேசுவே.

சேகர் : உண்மையிலேயே ஸார், இலக்கணம் முழுதாகப் படிச்சிருந்தா இங்கே வந்தேயிருக்கமாட்டேன். உங்க ஆசிர்வாதத்லே எங்கேயாவது ஒரு தமிழாசிரியனு யிருப்பேன் ஸார்!

ஹெட் : சரிதான் போதும்பா. நீ ரொம்ப பெரிய மனுஷன்.

ராஜா : உங்களுக்கு நான் ரொம்ப சின்னவன்தான் ஸார்!

[என்று சொல்ல ஹெட்கிளார்க் தலையைக் குனிந்துகொண்டு வேறு பேப்பரைக் கவனிப்பதுபோல் பாவனை செய்கிருர். சேகரனும் தன் இடம் வந்து அமர்கிருன். அமர்ந்ததும் உடனே]

ஹெட் : (Mr. A. 6.) மிஸ்டர் ஏ ஸிக்ஸ்!

[என்று அழைக்கிருர்]

சேகர் : ஸார்! (என்று மீண்டும் திரும்பி வந்து) என்ன ஸார்!

ஹெட் : இந்தாங்க. இதற்கெல்லாம் (duplicate fair copy) டூப்ளிகேட் பேர் காப்பி எழுதுங்க. இன்னிக்கே (despatch) டெஸ்பேச்சு ஆகணும். ஐயா இன்னம் ஒரு மணி நேரத்திலெ கொண்டுவரச்சொல்லி நோட் அனுப்சி யிருக்கார்.

சேகர் : முதல்லெ இது என்னுடைய வேலையில்லெ ஸார். நானும் சில (Periodicals) பீரியாடிகல்ஸ் இன்

னக்கி (due) ட்யூ, அனுப்பியாகணும்; எனக்கும் ஒய்வில்லே. கொஞ்சம் பொறுமையா வேணும்ணு எழுதித் தரேன்.

ஹெட்: அதெல்லாம் எனக்கு என்ன ஸார் தெரியும்? அய்யா சொல்லி அனுப்பிச்சியிருக்கார். பிறகு உங்க இஷ்டம்.

சேகர்: நீங்களே சொன்ணுதான் என்ன ஸார், எனக்கு நேரமில்லேயே இண்ணுதான் சொல்றேன்.

ஹெட்: அப்பொ செய்யப்போறீரா, இல்லியா? என்ஞலெ முடியாதுண்ணுட்டு, (I have no leisure and I am unable to attend this) ஐ ஹேவ் நோ லீஷர் அண்ட் ஐ ஆம் அனேபில் டு அட்டெண்ட் திஸ்' அப்படி இண்ணு எழுதித்தாரும்.

சேகர்: அய்யா என்னே செய்யும்படியாவும் நோட் எழுதியில்லிங்களே, நான் ஏன் ஸார் எழுதித் தரணும்?

ஹெட்: ஓகோ...டெம்பரரியா இருக்கையிலியே இப்படிண்ணு இன்னம் ஒரு ப்ரொபேஷனரா இருந்துட்டா!

சேகர்: ஸார்! டெம்பரரீ, ப்ரொபேஷனரீ இண்ணுட்டு ஏன் ஸார் அனுவசியமா (mention) மென்ஷன் பண்றிங்க. அப்போ தற்காலிக குமாஸ்தாண்ணு ராவணு ஸார்? இருபது கையா ஸார் இருக்கும்?

ஹெட்: ஏது, அதிகப்பிரசிங்கிதான் போலிருக்கு. இது கச்சேரி, (mind it) மைண்ட் இட்.

சேகர்: நானும் தெரிஞ்சிதான் ஸார் இருக்கேன், கச்சேரி இண்ணுட்டு! (plat form) ப்ளேட்பாரமாயிருந்தா, உண்மையிலியே பிரசங்கியாகவே மாறிடுவேன் ஸார்!

[என்று சொல்லிக்கொண்டே தன் இடம் வருகிறுன். ஹெட்கிளார்க் வாய்க்குள்ளாகவே ஏதேதோ முணறிக்கொண்டும், பேப்பர் கட்டுகளே அப்படியும் இப்படியுமாக எடுத்து எடுத்து வைத்தும் குழப்புகிறுர்]

[பெரிய அதிகாரியின் (கெஸட்டட் ஆபீஸர்) முகாம். வெளியில் ஜவான்கள் கெம்பீரமாக நிற்கின்றனர். சிறு அதிகாரிகள் ஒவ்வொருவராகப் பழவகையரு, மாலையுடன் வந்து, மாலை அணிவித்து, பழவரிசை வைக்கின்றனர். வணங்கி அறிமுகப்படுத்திக்கொண்டு திரும்புகின்றனர். ஒருவர் மாத்திரம்—கற்பனையூர் அதிகாரி—ஹெட்கிளார்க்குடன் நிற்கிறார். சில பேப்பர் கட்டுகள் ஹெட்கிளார்க் வசம் உள்ளன]

பெ. அதி : ஆபீஸ் எல்லாம் எப்படி யிருக்கு? இந்த year பிஸினெஸ் ஸ்டேட்மெண்ட்லெ பெண்டிங் எவ்வளவு?

கற். அதி : பெண்டிங் அதிகமில்லெ, டென் பெர்ஸண்ட்தான். அதுவும் அந்த A. 1. ப்ரேஞ்ச் பெண்டிங் தான் அவ்வளவும்.

பெ. அ : Who is that concerned clerk ?

கற். அ : One Somasundaram Pillai; he is unfit to handle any branch ; Particulary he is not obedient and does'nt care any body.

பெ. அ : Is it not your duty to frame charges against him and submit to your superior for orders ?

கற். அ : Yes sir. I have done so already and here is his explanation.

(என்று சொல்லும்போது H. C. சோமு சம்மந்தமான file ஐ அதிகாரியிடம் தர, அதிகாரி, பெரிய அதிகாரியிடம் தருகிறார். அதை பெ. அ. வாங்கி வாய்க்குள் அலக்ஷியமாகப் பார்த்து, உத்

தரவு எழுதி முடித்து, திருப்பித் தருகிருர். அதை வாங்கிக்கொண்டே)

கற். அ: Another request; one temporary man who is insubordinate and useless for any work may be transferred any where else; I am unable to control him!

பெரி. அ: You need not worry about these fellows. Such fellows should be removed atonce without any notice; No other way.

(ராஜசேகரன் மீதுள்ள சார்ஜில், டிஸ்சார்ஜ் உத்தரவு எழுதப்படுகிறது. உடனே பெரிய அதிகாரி புறப்படுகிருர். அனைவரும் வழி கூட்டி யனுப்புகின்றனர். பின்னால் தங்கிய கற்பனையூர் அதிகாரியிடம்)

ஹெட்: orders உடனேவா issue பண்ணிடணும்?

அதிகாரி: டைப்பண்ணி வீட்டுக்கு அனுப்பிவையுங்க. (மறைதல்)



திரை—13 சோமசுந்தரம் வீடு

[தனம் படுக்கையில்-சந்திரா அருகிலும், சோமு சிறிதுதூரத்தில் சாய்வு நாற்காலியில் படுத்தும் உள்ளனர். முருகேசன் அப்படி இப்படி எதை எதையோ எடுத்தும், வைத்துக்கொண்டும் இருக்கிருன்]

சந்திரா: உடம்பு என்னம்மா செய்யுது? கொஞ்சம் கியாழமாவது வைக்கிறேன் சாப்ட்றியாம்மா?

தனம்: சந்திரா, கியாழங்கூட எங்கே செல்லுது? வாயெல்லாந்தான் ஒரே கசப்பா யிருக்கே.

சோமு: (எழுந்து அருகில் சென்று) தனம், எப்படியிருக்கு, சொன்ன கேட்டாதானே. எத்தனைமுறை பச்சை தண்ணியிலெ முழுவறது. ஊருக்குப் போயிட்டு வந்தது,

அங்கே ஒரே அழுகை, பச்சைதண்ணி எல்லாம் ஒண்ணு சேர்ந்துட்டுது. டாக்டரிடமாவது போய் வரட்டுமா? ஏதாவது கொஞ்சம் (medicine) மெடிஸின் வாங்கிகிட்டு வர்ரேன்.

தனம்: டாக்டர்கிட்டே போறதுண்ணு பணத்துக்கு எங்கெங்க போறது? பண்டாரம் ஒருத்தன் வருவான். அவன் ஒருவேளெ மருந்தெ தேன்லெ கொடுத்தாலும் உடனே கண்டிக்கும்; டாக்டர் கிட்டேண்ணு வளர்ந்து கிட்டுதானுங்க போவும்.

சோமு: உனக்கு பெரிய டாக்டர் பண்டாரந்தான். அவன் மருந்தே சில பேருக்குத்தான் பிடிக்கும். டாக்டர் மருந்துண்ணு அப்படியில்லெ. நான் போய்ட்டு வர்ரேன். சந்திரா, தண்ணிகேட்டா சுடவைச்சு கொடு, கிட்டவே இரு.

[என்று சொல்லிக்கொண்டே வெளி வருகிறார்]



திரை—14 அலுவலகம்

வாடிக்கையான கூச்சல், நடமாட்டம்
ஹெட் கிளார்க்கின் ஆர்ப்பாட்டம்

[ராஜசேகரன் தன் பிரிவில் வேலை பார்த்துக் கொண்டிருக்கிறான். தபால் குமாஸ்தா கல்யாணம், ஒவ்வொரு குமாஸ்தாவினுடைய பேப்பர்களைத் தந்து D. R.ல் கையெழுத்து வாங்கி வருகிறான்]

கல்யாணம்: இந்தா மிஸ்டர். இன்னிக்கி உன் ப்ரேஞ்சுக்கு நாலே பேப்பர்தான்.

[என்று சொல்லி இராமநாதனிடம் தருகிறான். இராமநாதன் ஒவ்வொன்றாகப் பார்க்கையில்]

கல்யா : ராமநாதன், D. R.லே கையெழுத்துப்போட்டுட்டு பிறகு பாரேன்.

இராம : பொறுங்க மிஸ்டர். ஒரேவழியா பறக்கிறிங்களே. இது என்ன பேப்பர் ஸார். எவனோ டூர் ப்ரோக்ராம் (tour programme) அனுப்பியிருக்கான். இந்த எழவுக்கும் ஒரு நெம்பர் போட்டுட்டிங்க. அதுவும் என் தலையிலெதானு கட்டணும், எவன் எவனோ சம்மந்தமில்லாதவன்லாம் ஸ்வாமி தரிசனம் பண்றதுக்கு கேம்ப் கேம்ப் [camp) இண்ணுட்டு வருவான். இவர்களை நாமா மிஸ்டர் வரவெற்கப் போறோம். அய்யா இல்லெ இதெல்லாம் டீல் (deal) பண்ணனும்!

[என்று சொல்லி கையெழுத்து இடுகிறான்]

கல்யா : நீங்க சொல்றதென்னமோ வாஸ்தவந்தான். சரி, எடுத்து ஒரு பக்கமா போட்டுவைச்சா, வர்ரவன் வந்துட்டுப் போறான்!

[சொல்லிக்கொண்டே சேகரினிடம் வருகிறான்]

கல்யா : ராஜசேகர்!

[சேகர் ப்ரேஞ்சில் கவனத்தோடு இருக்கிறான்]

கல்யா : அடடே, உழைச்சவரையிலே போதும்பா.

சேகர் : (அண்ணாந்து பார்த்து) ஓ வாங்க. கவனிக்கவேயில்லெ. இந்த லீவு அக்கவுண்டெ (verify) பெரிபை பண்ணிகிட்டு இருந்தேன்.

கல்யா : (never mind) நெவர்மைண்ட்; ஒரு விஷயம், இந்த கச்சேரியிலெ எல்லா பழிபாவத்துக்கும் நான்தான் இருக்கேன். என் கையாலெ தர்ரத்துக்கு எக்ஸ்க்யூஸ் (excuse) பண்ணிக்கிணும்.

சேகர் : என்ன கல்யாணம்! பீடிகை பலமாப்போட்டியே. விஷயத்தெ (clear) க்ளியரா சொல்லப்பா.

கல்யா : ஒண்ணும் (confidencial) கான்பிடென்ஷியல் இல்லெ. ஓம்பேர்லெ ஆர்டர்ஸ் ஒண்ணு இருக்கு.

சேகர்: ஆர்டர்ஸா! அப்படிண்ணு தூக்குதண்டனையா யிருக்குமோ, எங்கங்கே?

கல்யா: அப்படி யெல்லாம் விபரீதம் ஒண்ணு மில்லெ...

[என்று சொல்லிக்கொண்டே உத்தரவை எடுக்கிறான்]

சேகர்: கல்யாணம், தன்னம்பிக்கையே துளிகூட இல்லப்பா உனக்கு. அடுத்த வினாடி நரகலோகம் இருக்கிறதா சொல்லப்படுதே, அந்த ஊருக்கு (transfer) டிரேன்ஸ்பர் ஆனாலும் போகத் தயார்.

[என்று சொல்லிக்கொண்டே உத்தரவை வாங்கித் தலைப்பைக் கண்டதும்]

ஷெ: ஓஹோ, அடியேன் விஷயந்தான். முதல்லெ நிர்வாக ரீதியா, (original) ஒரிஜினல்லே கையெழுத்துப் போட்டுட்டு, பிறகு படிக்கிறம்பா.

[என்று மற்றொன்றில் கையெழுத்துப் போட, கல்யாணம் மற்றொரு குமாஸ்தாவிடம் செல்கிறான். இராஜசேகரன் வாய்க்குள்ளாகவே ஆர்வத்துடனும், சிறிது திகைப்புடனும் படித்து வருகிறான். பின்புறம் திருப்பி, கடைசி பாராவை நோக்குகையில் சிறிது முகம் மாறுகிறது. சிறிது அதையே உற்று நோக்கியதும், புன்னகையுடன் சூழ்ந்துள்ள குமாஸ்தாக்களைப் பார்க்கிறான்]

சேகர்: ராமநாதன், ஒரு நல்ல விஷயம்.

[அனைவரும் கவனிக்கிறார்கள்]

இராம: என்னப்பா?

சேகர்: விடுதலை!

ஆல்பர்: யாருக்கு?

சேக: எனக்குதாம்பா,......

இராம: விஷயத்தெ ஒழுங்கா சொல்லாமெ என்னப்பா உளற்றே!

சேகர் : ஓஹோ ! விடுதலை இண்ணு சொன்ன புரியி லையோ? அதாவது—என்னுடைய 'உத்தியோகக்கயிறு' இருக்கே-அது அறுந்துபோச்சி; இதான் விஷயம் !

இராம : (திடீரென எழுந்து) என்ன சேகர், உண்மை யிலியா ? யார் சொன்னது ?

சேகர் : சொல்றது என்ன ; இதோ ஆர்டர்ஸ் !

[என்று உத்தரவுத்தாளைக் காட்ட, இராம நாதன், ஆல்பர்ட் முதலான சில குமாஸ் தாக்கள் அவனிடம் விரைந்து வருகின்ற னர். இராமநாதன் ஆர்டர்ஸை வாங்கி சிறிது வாய்விட்டுப் படிக்கிறான்; மற்ற வர்களும் பின்புறமாகவும், பக்கத்தில் இருந்தும் உத்தரவைப் பார்க்கின்றனர்; முடிந்ததும்]

இராம: சார்ஜஸ் என்ன இண்ணுட்டே புரியாமெ ஆர்டர்ஸ் இண்ண, என்னப்பா வைச்சது சட்டமாயிருக்கு!

ஆல்பர் : செ, சே, என்னப்பா அக்ரமம். உம்ம இடத்துக்கு வர்ரது யாரு? அப்படி யிண்ணகூட நீர்தான் எக்ஸ்மிலிடெரியாச்சே. வேறெ எங்கேயாவது (provide) ப்ரொவைட் செய்யணுமில்லே; வேகன்ஸீயா இல்லே ?

சேகர் : வேகன்ஸி இல்லாமெ என்ன ! எவ்வளவோ இருக்கப்பா. இந்த ஆர்டர்ஸைப் போட்டாங்களே அவர் கள் உள்ளத்திலியும் வேகன்ஸிதான். அறிவு இருக் கணுமே, அந்த இடம் கூட காலிதான். ஒழியுது. என்னை யார் ரிலீவ் பண்றது ; யாரிடம் சார்ஜ் ஹேண்ட் ஓவர் செய்யணும்.

இராம: ஹெட்கிளார்க்கெ கேட்டா தெரியுது !

சேகர் : ஆமாம் ராமநாதன். நம்ம பூசாரியைத்தான் கேக்கணும். (என்று ஹெட்கிளார்க்கிடம் சென்று) ஆர்டர்ஸை வாங்கிகிட்டேன். யார்கிட்ட சார்ஜ் தர்ரது இண்ணுட்டு புரியிலெ. அதோடெ ஒரு ரிகொஸ்ட், நேற்று வரையிலெ என் சம்பளமும் க்ளெயிம் பண்ணி தந்துட்டா, கொஞ்சம் சௌகரியமாயிருக்கும்.

ஹெட்: கல்யாணத்துகிட்டே ஹேண்ட் ஓவர் பண்ணிடுங்க; மற்றபடி சம்பள விஷயம் எனக்குத் தெரியாது.

சேகர்: சரி போறதுதான் போறேன். நானே ரெண்டு நிமிஷத்திலெ பேபில் (paybill) எழுதிட்றேன். நீங்க கையெழுத்து போட்டிங்கண்ணு, ஐயாவும் அப்ரூவ் பண்ணிடுவார்; கொஞ்சம் தயவுசெய்யணும்.

ஹெட்: என்ன ராஜசேகர், தெரியாமெதானே பேசிறிங்க. சம்பள விஷயத்திலே எனக்கு என்ன இருச்கு. மந்த் எண்ட்லெ (month end) தான் போடணுமே யொழிய இப்பொ எப்படி க்ளெயிம் பண்றது. அதுவும் நான் கையெழுத்துப் போட்றதும் தவறுச்சே! ஐயா வேணும்ணு எப்படியும் செய்ய முடியும்.

சேகர்: சரி. சார்ஜெ ஒப்படைச்சுட்றேன். சம்பளம் பிறகுதான் வரட்டும். (என்று சொல்லித்தன் இடம் வந்து) மிஸ்டர் கல்யாணம்! கொஞ்சம் வாங்க ஸார். ஏதோ கொடுத்த மாதிரியாகவே......

[குமஸ்தாக்கள் சிலர் சூழ, பீரோவைப் பூட்டி, சாவியை கல்யாணத்தினிடம் ஒப்படைக்கிறான். ஆல்பர்ட், ஐஹ்ரியா முதலியவர்களுடன் வெளிப்புறம் வந்து, காரியாலத்தைக் கடந்து]

சேகர்: அப்பொ வரட்டுமா?

இரா: ரூம்லியே இரு சேகர்! நாங்க வந்த பிற்பாடு வெளியே போவலாம்.



## திரை—15 சோமசுந்தரம் வீடு

[தனம் படுக்கையில், அண்டையில் சோமு]

தனம்: இந்த பையனையும் கண்ணிலெ இல்லாமெ காலேஜுக்கு அனுப்சுட்டிங்க. படிக்தாதவங்கள்ளா பிழைக்காமெயா இருக்காங்க. ஏதோ அவன் தலையிலெ

விதிச்சமாதிரியா நடந்துட்டுப்போவுது; படிச்சது போதாதா என்ன?

சோமு: தனம், உனக்கு ஏன் அந்த கவலே யெல்லாம் படிக்கிறது என்றெக்கும் நல்லது தான். இன்னும் ஒரு வருஷம் பல்லேக்கடிச்சிகிட்டு படிக்க வைச்சிதான் ஆகணும்.

தனம்: இந்த பொண்ணுக்கும் வயசு ஆவுது. யாரோ கேட்டாங்கண்ணு சொன்னிங்களே. பதில் போட்டிங்களா?

சோமு: அந்த மாப்பிள்ளெ அவ்வளவு பொருத்தமா எனக்குப்படலே. எல்லாம் ஒன் உடம்பு சௌகரியப் படட்டும்.

தனம்: என் ஒடம்பு எங்கெங்க...எனக்கென்னமோ ரொம்ப பலஹீனமாயிருக்கு. ஏதோ அவளெ சீக்கிரமா கட்டிக் கொடுத்துட்டா கொஞ்சம் ஆறுதலாயிருக்கும்.

சோமு: ஆகட்டும் பார்ப்போம்... சந்திரா அடுத்த வேளெ மருந்தெ கொடுத்தியாம்மா.

சந்திரா: (வந்து கொண்டே) கொடுத்தேம்பா...... உடம்பு சௌக்கியமாவற வரைக்கும், அம்மாவெ பேசாமெ இருக்க சொல்லம்பா! எப்போ பார்த்தாலும் ஏதாவது...

தனம்: ஏங்க, ஒங்க கச்சேரியிலே வேலெ பார்க்குதே ராஜசேகரன், அந்த பிள்ளெ கூட நம்ம வகைதானும்மே!

[சந்திரா உற்று கவனிக்கிறுள்]

சோமு: ஆமா, நம்ம வகைதான். நல்ல வாழ்ந்த குடும்பம். நொடிஞ்சி போச்சி. பாவம், இப்பொ கொஞ்சம் கஷ்டந்தான். பையனுக்கும் யாரும் ஆதரவில்லெ. எதுக்கு கேக்கறே?

தனம்: இல்லெ, பிள்ளெயுந்தான் படிச்சிருக்கு. ஏதோ லக்ஷணமாகவும் இருக்கேண்ணுதான்...

சோமு: பையனும் புத்திசாலி. இந்த கச்சேரிக்கு வந்த போதே எனக்கும்...மனசிலே எண்ணம். சரி இருக்கட்டும்......நடக்க நடக்கப் பார்ப்போம் இண்ணு இருந்தேன். (அதுசமயம் சேகரன் வருகிறுன்) வா சேகர், இப்படி உட்கார்.

சேகர்: ஹாஸ்பிடல் மருந்துதானே கொடுக்கிறிங்க. இப்போ எப்படியிருக்கு?

சோமு: ஏதோ ஒரு மாதிரியா இருக்கு. ரொம்ப பலஹீனமாயிருக்கிறதா சொல்று......ஒவ்வொரு சமயத்திலெ கொஞ்சம் புத்தி மாறுட்டமா பேசறு.

சேகர்: மூளை கொதிப்பாகவும் இருக்கும். டாக்டர் கிட்டெ (detail) டிடெயிலா சொன்னிங்களா?

சோமு: ஆமாம், பலகாரணம். எல்லாம் டாக்டர் கிட்டே சொன்னேன். (inpatient) இன்பேஷண்டா சேர்த்துட்டாதான் முறையோடு கவனிக்க முடியுண்ணு அவர் சொல்றுர். எதற்கும் பணமும் முடையாயிருக்கு.

சேகர்: ஒரு வகையிலெ டாக்டர் சொல்வதும் சரி தான். இன்பேஷண்டா சேர்த்துட்றதுதான் சரி; (treatment) ட்ரீட்மெண்டும் ஒழுங்கா இருக்கும்.

தனம்: அத்தான்...சந்திரா...அப்பா எங்கம்மா?

சோமு: தனம், இங்கெதான் இருக்கேன்.

தனம்: பையன் கண்லியே இருக்கான். தந்தி ஒண்ணு கொடுங்களேன்...

சோமு: உனக்கு ஒண்ணுமில்லெ. நீ ஏன் கவலைப் பட்றே...ஏன் தனம், டாக்டர் ஹாஸ்பிடலியே இருந்து பார்த்துகிட்டாதான் நல்லது இண்ணு சொல்றுரு...என்ன சொல்றே?

தனம்: எப்படியோ, சௌக்கியமானு நல்லதுதான்; இந்த பொண்ணெ கட்டிகொடுத்துட்டு...ஏங்க பையன் ராத்திரி வண்டியிலெ வந்துடமாட்டான்?

சோமு: வராமெ என்ன; இப்பவே தந்தி கொடுத்துட்றேன்.

சேகர்: நான் போயி ஒரு வண்டியெ அழைச்சிக்கிட்டு வந்துட்றேன், நீங்க இருங்க.

சோமு: அப்படியே 'ஹாஸ்பிடல்லெ இன்பேஷண்டா சேர்த்திருக்கு. உடனே புறப்பட்டுவா' இண்ணு பையனுக்கு ஒரு ஒயரும் கொடுத்துட்டு வந்துடேன். அவன் வந்தாவாவது கொஞ்சம் ஆறுதலாயிருக்கும்.

சேகர் : சரி...வீணு நீங்க எதையும் (confuse) கன்ப்யூஸ் பண்ணிக்காமெ இருங்க...இதோ வந்துட்றேன்.

[என்று வெளியே புறப்படுகிறுன்]



திரை—16 ஹாஸ்பிடல்

[படுக்கையில் தனம்—அடுத்து சோமு, சந்திரா, முருகேசன், டாக்டர், நர்சு, ராஜசேகரன் சூழ்ந்துள்ளனர். டாக்டர் தன் கருவிகளால் தனத்தைப் பரிசோதிக்கிறுர். நர்சு, டாக்டருக்கு உதவிசெய்தல்; பரிசீலனை முடித்துக்கொண்டு டாக்டர் முகத்தில் சிறு மாறுதலோடு நகருகிறுர். சோமுவும், சேகரனும் அவரைத் தொடர்ந்து]

சோமு : டாக்டர் ஸார், எப்படி யிருக்குங்க?

டாக்டர் : ஒண்ணும் திடமா சொல்றதுக்கில்லே. ரொம்ப (weak) வீக்கான த்ரேகம்.

சோமு : என்ன டாக்டர் ஸார்; அப்படிண்ணு நம்பிக்கைக்கு இடமில்லையா?

[மௌனமாக டாக்டர் செல்வதைக்கண்டு துடிப்புடன்]

ஷை : ஸார்...என்ன மௌனமா யிருக்கிங்களே! நம்பவேண்டிய தில்லியா? ஐயோ நான் குடும்பஸ்தன், பிள்ளைகுட்டிக்காரன், கொஞ்சம் பாருங்க டாக்டர்.

டாக்டர் : இல்லெ Mr. சோமு! பார்க்கறதுக்கு இனி ஒண்ணுமில்லெ.

சோமு : ஐயோ, அப்படியா சொல்றிங்க.

[அதற்குள் தனம்—'அத்தான், அத்தான்!' என்கிறுள்]

சந்திரா : ஏம்மா.

தனம் : அப்பா எங்கே?

சந்திரா : தோ இருக்காரம்மா... அப்பா...... அப்பா!

[என்று அழைக்கிறாள். சோமு துடிப்புடன் திரும்பி, படுக்கையண்டை வந்து]

சோமு : தனம், என் தனம்... எப்படியிருக்கு!

[டாக்டரிடம் சேகரன்]

சேகரன் : ஒரு வழியுமில்லியா ஸார்?

டாக்டர் : இல்லெ சேகர். என்(attempt)அட்டெம்ட் எல்லாம் வீணுதாம் போச்சி. இனி எந்த முயற்சியும் தேவையில்லெ. ரொம்ப புண்பட்ட உள்ளம். வாழ்க்கையே ரொம்பதொந்தரவோட...மனவேதனே தான் அதிகம்.(body) பாடியும் ரொம்ப வீக். போஷாப்பே இல்லாததுதான் காரணம். எதைக் கொடுத்தாலும் (effect) எபக்டே இல்லே ஏதாவது (will) வில் போன்றது எழுதறதெ க்விக்கா (quick) சேஞ்சிடுங்க. இன்னம் (few minutes) ப்யூ மினிட்ஸ்க்குக் கூட நம்பிக்கையில்லெ.

[என்று சொல்லிக்கொண்டே மறைகிறார். சேகரன் வேகமாகப் படுக்கைக்கு வந்து சேருகிறுன்]

சோமு : தனம், நான் கொடுத்து வைச்சது இவ்வளவு தானு?

தனம் : கஷ்டப்படாதீங்க, அத்தான்......எனக்கென்னமோ ஒருமாதிரியாத்தான் இருக்கு; பெரியவன் வந்துட்டானு?

சோமு : வந்துடுவான் தனம்... வர்ர நேரந்தான்.

தனம் : சந்திரா. கண்ணு எங்கம்மா; முருகேசா...

சந்திரா : ஏம்மா (சிறிது தேம்பலோடு) அம்மா...என்னம்மா...

[தந்தை முருகேசனைப் பிடித்து அணைத்துக்கொள்கிறார்]

சோமு : ஏன் தனம்...என்ன சொல்றே

தனம் : அத்தான்...பாவம், எவ்வளவோ கஷ்டப்பட்டிங்க. இந்த உத்தியோகத்திலெ மேலே மேல துன்பந்தான் அடையிறிங்க. என்னுலியும் ஒரு சுகமும் இல்லெ.

அத்தான், இந்த பெண்ணைக் கட்டிக்கொடுக்காமெ... அத்தான்... நம்ப ராஜசேகருக்கே தான்... சந்திராவெ... கொடுத்துடுங்களேன். நம்ம வகையிலெ அதுக்கு ரொம்ப விஸ்வாஸம்... ஏதோ ஒண்ணுக்கு ஒண்ணு... ஆதரவாயிருக்கும்.

சோமு: அதெப்பற்றி கவலைப்படாதே தனம்... ஒன் இஷ்டப்படியே சேகருக்கே கொடுத்துட்றேன்.

தனம்: பெரியவன் வல்லியா அத்தான்... சந்திரா... முருகேசா.

[என்று மூச்சடக்கி அடக்கிக் கூறுகிறாள்; விழி நேர் நோக்குவதைக்கண்ட]

சோமு: தனம், தனம்!

சந்திரா: அம்மா, அம்மா! [கதறுகிறாள்]

முருகேசன்: (அம்மாவைக் கட்டிக்கொண்டு) அம்மா அம்மா.

[சேகரன் மரமாக நின்று தேம்புகிறான்]

சோமு: தனம், தனம்! (என்று சில முறை தன் தலையில் அடித்துக்கொள்கிறார். சேகரன் சோமுவைப் பிடித்து, அணைத்த மாதிரியில் கையை மறிக்கிறான். சோமு அப்படியே மூர்ச்சையாகிறார். சேகரன் கைகளால் ஏந்திய வண்ணம் நாற்காலியில் சாயவைக்கையில், டாக்டரும், நர்சும் மயக்கம் தெளியவைக்க முயற்சிக்கிறார்கள். மூத்த மகன் குணசுந்தரம் பதை பதைப்புடன் ஓடிவந்து, தாயைக் கட்டி அழுகிறான்; கதறுகிறான். அண்ணனை சந்திராவும், முருகேசனும கட்டியழுதல். சோமுவின் தலை அசைகிறது. டாக்டரும், நர்சும் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொள்கின்றனர்)

சேகரன்: (சோமுவின் மார்பைத் தடவிக்கொண்டே) ஸார், ஸார்!

சோமு: (பெருமூச்சோடு) தனம்... தனம்!

குணசுந்: (தந்தையைக் கட்டிக்கொண்டு) அம்மா, அம்மா (என்று கதறுகிறான்)

சோமு: (மகனைத் தடவிக்கொண்டே) சுந்தரம்...... நம்ம கொடுத்து வைச்சது அவ்வளவுதாண்டா!

[கோவிந்தசாமி நீலத்துணியில் கட்டிய சிறு மூட்டையைத் தோளில் தாங்கி வருகிறான். அஞ்சலை தலையில் பூச்சூடிக் கொண்டு இருக்கிறாள்]

அஞ்சலை: ஏது! இண்ணிக்கி பொழுதோடே வந்துட்டே.

கோவி: (மூட்டையைக் கீழிறக்கிக் கொண்டே) வந்துட்டனா! திரும்பிப் போகணும் அஞ்சலெ. ஹெட்கிளார்க் வீட்டம்மா வரச்சொன்னாங்க.

அஞ்ச: எட்டுளார்க்கு தான் ஒனக்கு எஜமான். அவர் வீட்டு அம்மா கூடவா.

கோவி: பைத்தியம் அஞ்சலெ நீ. உலகம் இருக்கிற இருப்பு தெரியாமெ. அம்மாவெ சந்தோஷப் படுத்தினாதான் அய்யா எறிஞ்சி விழாமெ இருப்பாரு...போவுது நீ ஏது இன்னிக்கு ஏக குஷாலா இருக்கே...அஞ்சலெ, கல்யாணத் தண்ணிக்கி இப்படிதான் இருந்தே. அட! மூகமே நிலா மாதிரியில்லெ இருக்கு.

அஞ்ச: சும்மா ஏன் அத்தான் தேன்மாரி பேசறே! ஒரு சினிமாவுக்குப் போறதுக்கு வழியில்லெ...உஹூம்....

கோவி: ஓஹோ...ஹோ...ஹோ...இதுக்குத்..தானா! வழியா யில்லெ. தெற்கு வீதியாப் போயி, கோடியிலெ மேல்புறமாகத் திரும்பினா...

அஞ்ச: போற வழியா கேட்டேன். 'அபூர்வ சிந்தாமணி' இண்ணு நல்ல கதையாம், பார்க்கணும்ணு சொன்னா!

கோவி: பார்க்கறதுக்குதான் வயில்லெ; கையிலெ காசுவர வழியிருந்தாயில்லெ? ஊர் தாலியெ அறுத்தா தானே காசு, பணம் எல்லாம்.

அஞ்ச: சினிமா போறதுக்கு காசு பணம் எல்லாம் ஏன்? கச்சேரியிலெ உத்தியோகம் பண்றவங்கதான், சும்மாவே போவாங்களாமே!

கோவி : போவாமெ என்ன. எங்க குமாஸ்தால்லாம் கூட (first class) பர்ஸ்ட் க்ளாஸ்லெ நாற்காலியிலே தான் உட்கார்ந்து பார்த்து வர்ராங்க. நானும் கூடபோயி குமாஸ்தா வர்ராங்க' இண்ணு அந்த சினிமாகார்கிட்ட சொல்லுவேன். உடனே அவங்களே வந்து அழைச்சிகிட்டு போவாங்க. அதோடவா, கலர் கிலர், சிகரெட் கிகரெட் இண்ணு எல்லா சப்ளையும் நடக்கும்.

அஞ்ச : இவ்வளவு சொல்றியே அத்தான். நம்ப என்ன சிகரெட்டும் கலருமா கேக்கறம்? சினிமாதானே பார்க்கப்போறோம்?

கோவி : ஆமா ஒண்ணு. எல்லாம் சரிதான். இவங்க இப்படி சினிமா பார்த்துட்டு வந்ததும், அந்த சினிமாக்காரர் பேசறதெ கேக்கணுமே, காது கொள்ளாது அஞ்சலெ!

அஞ்ச : அப்படி என்னுவாம்?

கோவி : அவர்களுக்குள்ளவே பேசிக்குவாங்க; அதோ போரானுவ அரைடஸனுக்கு; எல்லாம் ஒரே ஓஸு! இவனுங்கதான் நல்லா கொள்ளை அடிக்கிறானுவளே, தெண்டத்திலே என் சினிமா பார்க்கணும்? அதோடவா ஒரு செட் வந்து போச்சின்னு இவனுவ சிகரெட்டுக்கும் காப்பிக்குமே வேறெ, 4, 5 கைவிட்டும்போவுது. எல்லாம் நீட்டாதான் ட்ரஸ் பண்ணிகிட்டிருக்கானுவ' இப்படியெல்லாம் புகழ்வாங்க.

அஞ்ச : அப்படியா அத்தான். நமக்கு ரத்தம் இருக்கு. அப்பேர்ப்பட்ட மானங்கெட்ட சினிமா பார்க்கணுப்ணு நம்ம தலையிலெ என்ன எழுதியிருக்கு? காசு இருந்தா பார்க்கறது, இல்லேண்ணு சும்மா விழுந்து கிடக்கிறது.

கோவி : அதிலியும் இந்த சினிமா இருக்கிற பவுசெ நினைச்சா ஒரு பாட்டாகூட பாடிட்லாம்.

அஞ்ச : ஆமா; பஜனெயிலெ அண்ணிக்குக்கூட பாட்னியே; எங்கங்கே பாடு அத்தான்!

கோவி : பாட்றேன், கதவை மூடிட்டு வா.

அஞ்ச : விளக்கு வைக்கிற நேரத்திலெ கதவெ ஏன் மூடசொல்றே?

கோவி : மூடிட்டு வாயேன் சொல்றேன்.

அஞ்ச : (மூடிவிட்டுவந்து) ஊம், மூடிட்டேன்...

கோவி : ஹாம்... பாட்றதுக்குதான் சொன்னேன், தோ பாட்றேன்.

'ரிம்ஜம் பருஸே பாதலுவா' என்ற மெட்டு

**தமிழ்ப் படத்தைப் பார்ப்பதிலே தம்படிக்கு என்ன லாபம்?**
**தாழ்ந்த நமக் கேதுலாபம்? தாழ்ந்த நமக்கேது!...**

**சுமை சுமையாக, சுருள் சுருளாக ஆயிரம் ஆகியும்**
**இமியளவேனும் ஏழையர்கள் ஏற்றங்காணவோ இல்லை**
**இரக்க மில்லாத நெஞ்சம் உடையவரால்!... (தமிழ்)**

**அறிவு நிறைந்த ஆய்வுமிகுந்த ஆண்களும் பெண்களும்**
**அறிஞர் அநேகர் சேர்ந்திருந்தும் அமைத்திடும் கதையாலே**
**அறியாமை விலகிய தேது? அறியாமையே!... (தமிழ்)**

**பல்லோர் ஏழைகள் ரத்த முறுஞ்சும் கொள்ளையே கொள்ளையே**
**பொல்லா தவர்தம் பொருளாலே பொது நலந்தான் ஏதுஏது?**
**இல்லாமை ஒழிவ தாமோ? இல்லாமையே!... (தமிழ்**

கோவி: (பாடலை முடித்துவிட்டு) அதிலியும் சினிமா பார்த்தாலும் ஏதாவது பிரயோசனம் இருக்கா. இது வரிக்கும் நாமுந்தான் சினிமா பார்த்துகிட்டு வர்ரமே, என்ன கண்டுட்டம்? நம்ம அறிவு ஏதாவது கூடிப் போச்சா? நம்ம ஏழ்மைநிலமெ கொஞ்சமாவது மாறிப் போச்சா? ஒரு பிரயோசனமும் இல்லெ. ஏழைவொ ரத்தம் சிந்தி, உழைச்ச காசெல்லாம் முதலாளிவ 'சினிமா சினிமா' இண்ணு பறிக்கறுனுவ. இந்த காலத்லியே பாரு அஞ்சலெ. பணக்காருவ, முதலாளிவ, படிச்சவங்க, மேசா திக்காருங்க எல்லாம், நாலா பக்கமும் அட்டை மாதிரியா நம்மெ உறிஞ்சிறுங்க. இல்லாமியா நம்ம காந்தி தாத்தா இந்த சினிமாவே பாக்கிறதில்லையாம்... அடடா அவசெயுங் கொண்ணுட்டுது இந்த கொலைகார தேசம். சண்டாளன் எப்படிதான் மனசு வந்துதோ!

அஞ்ச: ஐயோ அத்தான்! கொண்ணுனே படுபாவி. அவன் சந்ததியே அத்துப் பூடாதா?

கோவி: இந்த ஒலகத்திலியே அவரெப்போல ஒருத்தர் எங்கே இருக்கப்போறுங்க. நம்ம ஏழைங்க விஷயத்திலே, கீழ்சாதி மக்க விஷயத்திலே, அவரு எவ்வளவோ பாடுபட்டாரு.

அஞ்ச: அய்யோ, அவரெ நினைச்சா துக்கமாயிருக்கு, அவரு கடவுளுதான் அத்தான்!

கோவி: அதிருக்கட்டும், இந்த கண்ருவி சினிமாவெ மறந்துட்டியா அஞ்சலெ?

அஞ்ச: அத்தான், நீ ரொம்ப யோசனக்காருதான், இல்லாமியா கச்சேரியிலெ சேவகம் பண்றே.

கோவி: மறந்தே பூட்டேன். நல்ல வேளையா கச்சேரி இண்ணதுப் நினைவு வந்தது. ஹெட்கிளார்க் அம்மா வரச்சொன்னுங்க, இண்ணு சொன்னேயில்லே. போயிட்டு வர்ரேன். சினிமாவுக்குப் போவலேண்ணு கோவிச்சுக்கிலியே கண்ணு!

அஞ்ச: இல்லியே; புத்தி வந்துது அத்தான். நீ போயி கடிசா வந்துடு ராசா!



திரை—18

அலுவலகம்

[வாடிக்கையான நடமாட்டம், கூச்சல். சோமு மிகச் சோர்வுடன் நுழைகிறூர். இவரைக் கண்ட குமாஸ்தாக்கள், பியூன்கள் பலர் சூழ்கின்றனர்]

இராம: கடவுள்கூட இருக்கா இல்லியா இண்ணு சந்தேகமா யிருக்கு ஸார். மேலெமேல துன்பப்பட்டுகிட்டிருந்தா அதற்கும ஒரு அளவு இல்லியா; பல வகையிலும் ரொம்ப தொந்தரவு பட்றிங்க...

ஜக்ரியா: கடவுள்தானே? நம்ம பிரார்த்தனைக்கூடத்தில், தினமும் பார்க்கறமே!

ஆல்பர்ட் : அக்ரம உலகம்பா இது ! உலகப் பிரளயமே வந்து அடியோட மூழ்கி வேறெ புது உலகம் ஏற்பட்டா தான் கொஞ்சம் நீதியெப் பார்க்க முடியும்.

சோமு : என்ன செய்றது மிஸ்டர். ஏதோ அவரவர்கள் வந்ததெ அனுபவிச்சிதானே ஆசனும்... சம்ம சேசர் பாவம், எனை ரீசன் இருக்கு; அவரெயுந்தான் அனுப்சுட்டானுவ? ஒர்க்லெதான் என்ன?...

ஆல்பர்ட் : திறமையும் நேர்மையுமா ஸார் பார்க்கறுங்க! ஏதோ மனசாட்சியெ அடகு வைச்சுட்டு, இழுத்த இழுப்புக்கு 'ரப்பர்' மாதிரியா இருந்தாதானே இங்கெ வாழ முடியும் !

[ஹெட்கிளார்க், கையில் ஒரு (file) பைலுடன் வருகிருர். எல்லா குமாஸ்தாக்களும் அவரவர் இடம் செல்லுகிருர்கள்]

சோமு : (எழுந்து) வாங்க ஸார்.

ஹெட் : 'பட்ட காலியே படும், கெட்ட குடியே கெடும்' இன்றது உண்மைதான் சோமு. அக்ரமக்காரர்களுக்குத்தான் உலகம் இது. நம்மைப்போன்றவாள்ளாம் என்ன சுகத்தைக் காண்ரு ?

சோமு : உலகத்தெ நிந்திக்கிறதிலியும் என்ன ஸார் பிரயோசனம். ஏதோ ப்ராப்த மிருந்தா யாரை விட்டது ? ஒரு மஹாத்மா காந்தியெவிடவா ஒரு நல்ல மனுஷன் கிடைக்கப்போறுன். அவருக்குந்தான் ஒரு எதிரி ஏற்பட்டான். அவரையுந்தான் இழந்துட்டோம். அப்படியிருக்க நாம்மட்டும் எவ்வளவு காலம் இருந்துடப்போறேும்.?

ஹெட் : ஆர்டர்ஸ் ஒண்ணு, உடனே சொர்வ் ஆகணுண்ணுட்டு இன்ஸ்ட்ரெக்ஷன்ஸ்; (instructions) இதெ...

[என்று சொல்லிக்கொண்டே நகல்ஒன்று தந்து, மற்ருென்றில் கையெழுத்து வாங்குகிருர்]

சோமு : அதைப்பற்றி என்ன. நல்லதோ, கெட்டதோ எதாயிருந்தாலும் மறுக்கவாபோறோம்?

[கையெழுத்து இடுகிறார்]

ஹெட் : நீங்க பொறுமையா பாருங்க, ப்ரேஞ்சிலே பேப்பர் குவிஞ்சிகிடக்கு, நான் வர்ரேன்.

சோமு : ஓ...நீங்க வேலையைப் பாருங்க; போங்க ஸார்!

[ஹெட்கிளார்க் தன் இடம் வருகிறார். இதைப் பிற குமாஸ்தாக்களும் கவனித்துக் கொண்டிருக்கின்றனர். சோமு ஆர்டர்ஸை மனதுக்குள்ளாகவே படித்து வருகிறார். இடையிடையே வியப்புக் குறி தோன்றுகிறது. மறு பக்கம் திருப்பி, இறுதி பாராவைப் பார்க்கையில் வாய்விட்டே]

"In the circumstances, I order that Sri. P. Somasundaram Pillai shall be reverted permanently as a Lower Divison clerk." (மிகத் துடிப்புடன்) ஹா, (revertion) ரிவெர்ஷன்......என்ன!...... (மீண்டும் அதையே) I order that Sri. P. Somasundaram Pillai shall be reverted permanently as a Lower Division clerk......revertion......ஆ......ரிவெர்ஷன் தான்!...........

[குமாஸ்தாக்கள் ஒவ்வொருவராக நெருங்குகின்றனர்]

24 வருஷ சர்விஸுக்குப் பின்னாலா? எனக்கா?...... லோயர் டிவிஷன் கிளார்க்காவா?......சரியான காரணம் இருக்கா? உழைச்ச உழைப்புக்கெல்லாம் இது தான் பிரதி பலனா?...என் நேர்மைக்கும், ஒழுங்குச்கும், பொறுமைக்கும் இதுதான் பரிசா?... இது நீதியா?... இந்த அளவுக்கு நான் குற்றவாளியா?... உண்மையை உணர்ந்தவர்கள் ஒருத்தரும் இல்லியா?...இதுவும் சமூகமா?...இந்த அக்ரம வர்க்கம்...அநியாய வர்க்கம் கடைசிவரையிலெ

வாழ முடியுமா? என் வாழ்வைக் கெடுத்தவர்கள், என் வயிறு எரிய எரிய, மனசு பதைக்க, பதைக்க,...ஐயோ... ரிவெர்ஷன்...தண்டனை...சரியான தண்டனை!

[அப்படியே நாற்காலியில் மூர்ச்சையாகி சாய்கிறார். சாய்வதற்குள், இராமநாதனும், ஆல்பர்ட்டும், கைகளால் தாங்கிய வண்ணம் சாய வைக்கிறார்கள்]

இராம: ஆல்பர்ட், பார்த்துக்க...சோடா ஒண்ணு வாங்கிகிட்டு...

[என்பதற்குள்]

கோவி: நீங்க இருங்க ஸார்!

[என்று சொல்லிக்கொண்டே ஓடுகிறான். இராமநாதன் மார்பைத்தடவிக் கொடுக்கிறான். அதிகாரியும் வருகிறார். இந்த சம்பவத்தைப் பார்த்துத் திகைப்புடன், ஹெட்கிளார்க்கை நோக்கி]

அதிகாரி: What is the matter?

ஹெட்: ஒண்ணுமில்லே.........வயசாயிட்டுதுல்லெ, ஏதோ மயக்கமா.......

அதிகாரி: Send for a Doctor and attend to this.

[என்று சொல்லிக்கொண்டே தன் தனியிடம் செல்கிறார். சோடாவுடன் திரும்பி வந்த கோவிந்தசாமி சோடாவை உடைக்க, அதை இராமநாதன் வாங்கி தன் கையில் கொஞ்சம் ஊற்றி முகத்தில் தெளிக்கிறான். சோமு சிறிது தலை அசைக்கிறார்]

இராம: ஸார், ஸார், சோமு! விழுச்சிப்பாருங்க... இப்படிப் பாருங்க.

[சோமு கண் விழித்துப் பார்க்கிறார். கொஞ்சம் உடலை அசைக்கிறார். சிறிது நிமிர்கிறார்]

சோமு: ராமநாதனு?

இராம: ஆமாம். ராமநாதன் தான். கொஞ்சம் திடமாயிருங்க ஸார்.

சோமு: ஆ...என்ன சொல்றே!...திடமாவா...எப்படி யிருக்க சொல்றே? ஆஹ்...ஹ்...ஹ்...

[உரக்க சிரிக்கிறார். அனைவரும் சிறிது அச்சத்தோடும், வியப்போடும் கவனிக்கிறார்கள்; இராமநாதன் எழுந்திருப்பவரைப் பிடித்து]

இராம: ஸார், ரெஸ்ட் எடுத்துக்குங்க. கொஞ்சம் அமைதியாயிருங்க......

சோமு: (well said) வெல்செட் ராமநாதன்! நீ உண்மையிலேயே—ஆஹா...நல்ல வழியெ சொன்னே. (many many thanks) மெனி மெனி தேங்க்ஸ். நல்ல வார்த்தெ...நல்ல மீனிங்...ராமநாதன், நீ சொன்னதுதான் செய்யப்போறேன்...(No consideration) நோ கன்ஸிடரேஷன்...(No doubt) நோ டவ்ட்; யோசனையே தேவையில்லெ... சந்தேகமே யில்லெ...ரெஸ்ட்...ஓய்வு தானே ராமநாதன்?...அதுவே தான்...ஓரே ரெஸ்ட்...நிரந்தரமாகவே ரெஸ்ட்...அப்பொதான்...அமைதி இண்ணு சொன்னியே, அது ஏற்படும். ரெஸ்ட் இருந்தாதான் அமைதி ஏற்படும். உண்மைதான் ராமநாதன். ஆனு, நான் ஒரு சர்வெண்ட் ஆச்சே...அடிமை, ஊழியன்தானே! நான் எப்படி ரெஸ்ட் எடுக்க முடியும்? (impossible) இம்பாசிபிள் ராமநாதன்... ரெஸ்ட் வேணும்னு, அமைதி வேணும்னு, எனக்கு சுயேச்சை யிருக்கணுமே. ஏது... அதுதான் இல்லியே... ஹாம்... ஏன் இல்லே? இருக்கு... ஒரேவழிதான் இருக்கு. பொய் பேசறதெ விட்டாதானே, உண்மை பேசமுடியும். இல்லியா ராமநாதன்! இந்த அடிமை உத்யோகத்தெ, ஊழியத்தெ விட்டாதானே, சுயேச்சை பெற முடியும்...இல்லியா ராமநாதன். ஆமா... என்ன சொல்றே...!

[இராமநாதனைக் குலுக்குகிறார். உடனே பரபரப்புடன் நாற்காலியில் அமர்ந்து, மேஜையில் இருந்த ஒரு தாளில் சில வரிகள் விரைவாக எழுதி, அதைப் பார்த்துக்கொண்டே]

ஆ!...(resignation) ரிசிக்னேஷன்... ராஜிநாமா! ஊழியத்தெ, அடிமைத்தனத்தெ ராஜிநாமா. ஆஹ்...ஹ்... ஹா. (சிரிக்கிறார்)

இப்பொ எனக்கு சுயேச்சை... (I am not a servant) ஐ ஆம் நாட் எ செர்வெண்ட், ராமநாதன். (Now I am fully independent) நவ், ஐ ஆம் புல்லீ இண்டிபெண்டண்ட்...ரெஸ்ட், அமைதி... இப்பொ இருந்துதான் எனக்கு ஓய்வு, எனக்கு அமைதி... இதோ, ராஜிநாமா! உத்தியோகத்துச்கு ராஜிநாமா... இந்த நிர்வாக ஊழலுக்கு ராஜிநாமா...பட்ட துன்பங்களுக்கு ராஜிநாமா... என் பழைய வாழ்வு முறைக்கு ராஜிநாமா...ராஜிநாமா...ராஜிநாமா!... ராஜிநாமா ..

[என்று கூவிக்கொண்டே அதிகாரியின் அறையுள் ஓடுகிறார். அதிகாரிமேஜையில் எழுதியதைப் போட்டுவிட்டு]

இதோ என் ராஜிநாமா!...(கைகூப்பி) நன்றி! உங்களுக்கு நன்றி!... என் வாழ்க்கையெப் புதுப்பிச்சிங்க உங்களுக்கு ரொம்ப நன்றி! (good bye) குட்பை (ஹாலில் வந்து) (Good bye) குட்பை!... (Thanks for all) தேங்ஸ் பார் ஆல்...

[கைகூப்பி கூவிக்கொண்டே வெளிவருகிறார். குமாஸ்தாக்கள் அனைவரும் வியப்போடு பின் நிற்கிறார்கள். இராமநாதனும், ஆல்பர்ட்டும் தொடர்கின்றனர். எதிர்பாராது இராஜசேகரன் வந்து விடுகிறான். கும்பலைக்கண்டு வியப்போடு]

சேகர்: என்ன ராமநாதன்! என்ன இது...என்னங்கே சோமு!

சோமு : ஓ...வா சேகர்! இப்போ நான் யார் தெரியுமா? செர்வெண்ட் இல்லெ. விடுதலை யடைஞ்சுட்டேன்.

சேகர் : என்ன ஸார் சொல்றீங்க... ஒண்ணும்புரியிலெ; ஆல்பர்ட் (fact) பேக்ட் என்ன?

[ஆல்பர்ட் சேகரனை சிறிது ஒதுக்கி, காதோடு விஷயத்தைக் கூறுகிறான். சேகர் வியப்படைந்து பெருமூச்சு விடுகிறான். எதிர்கொண்டு ஜட்கா ஒன்று வருகிறது]

சேகர் : ஜட்கா, நிறுத்தப்பா. ராமநாதன், நீங்க கச்சேரிக்குப் போங்க. சோமுவை நான் அழைச்சிகிட்டுப் போறேன். ஏறுங்க வீட்டுக்குப் போவலாம்.

[சோமு வண்டியில் ஏறுகிறார்]

சோமு : ராஜிநாமா செய்துட்டேன் சேகர். இன்னமே நான் அடிமையில்லியே, விடுதலைதானே சேகர்!...

[வண்டி மறைகிறது]

(பின்னணிப் பாடல்)

"உடல் ஆவியும்போல் வாழ்வதென்றால் ஓவியமே நாம்" என்ற மெட்டு

ஒருசாண்வயிற்றால் உணவைநாடி ஊழியமேசெய்
உத்தியோகம் மெய்தானா? உத்தியோகம் மெய்தானா?
உள்ளபடி நடந்தால், உண்மை யறிந்திடுமா? (ஒரு)

உருவாகுமதி காரத்தாலே உளமகிழ்ந்திடுமா?
ஊதியம்பெற உடல்விற்பதை உலகறிந்திடுமா?
உத்தியோகம் மெய்தானா? உத்தியோகம் மெய்தானா?...

முற்றும்.




பொன்னி அச்சகம், சென்னை-21



பண்ணுருட்டி, நா. இராசவேல

இவர், புரட்சிக் கவிஞரின் மாணவர். அரசாங்கத் துறைகளில் 1943 முதல் இசையாலும், பேச்சாலும், எழுத்தாலும் தொண்டாற்றியவர்; 47 இறுதியில் நிகழ்ந்த என். ஜி. ஓ. போராட்டத்தில் பழிவாங்கப் பட்டு, நிவாரணம் பெற்றவர். அந்நாள் உருவானதே 'ராஜிநாமா!' மேலும், 49ல் தமிழ் காக்கச் சிறை சென்றவர்; தி. மு. க. தலைமை அலுவலக முன்னாள் பொறுப்பாளர்; இந்நாள் 'பொன்னி'யின் வினியோகப் பொறுப்பாளர். "அகம் தெளிந்த எழுத்தாளர் இராசவேலர், அந்தமிழ் நாட்டார் நன்றிக் குரியாரானார்." — ஆதலின், இந்த அறிமுக, 'விளம்பரம்' வேண்டுமன்றோ?

பொன்னி அச்சகம், சென்னை-21.